## முதல் வெளியீடு

பாண்டியராணி எங்கள் பதிப்பகத்தின் முதல்வெளியீடு. இந்த முதல் வெளியீட்டின் முன்னேற்றம் உங்கள் கையில் என்பதோடு, இந்தப்புத்தகத்திற்கு ஓ வி ய ம் வரைந்துதந்த **கான்** (பபி ஆர்ட்ஸ், குடியாத்தம்) அவர்களுக்கும், **பா ர தி** அச்சகத்தாருக்கும் எங்கள் நன்றியை தெரிவித்துக் கொள்ளுகிறோம், உங்கள் சார்பாக.

**பதிப்பகத்தார்**

## ஒரே சொல்!

தரையிலே விழுந்துகிடக்கும் தமிழர் சமுதாயம், தங்கச் சிம்மாசனம் ஏறுவதற்கான உணர்ச்சியைத் தரவல்லது இந்த நாடகம் என்ற எண்ணத்தோடு தருகிறேன் தாயகத்திற்கு-தமிழ்த்திரு நாட்டிற்கு.

த. சந்திரன்.

# பாண்டிய ராணி.

## (நாடகம்)

காட்சி:- 1,

இடம்:- ஆரிய குருவின் வீடு (ஆரியகுரு, சொர்ணு, கிட்டு) (பயங்கரமான சிந்தனையில் மனதை சுழலவிட்டபடி ஆரிய குரு நின்று கொண்டிருக்கிருர். மகள் சொர்ணுவும், கிட்டுவும் வருகின்றனர்.)

**சொர்ணு:** என்னப்பா ஆழ்ந்த சிந்தனை ?

**ஆரி:** ஆகாதகாரியம் ஆகத்தான் ஆழ்ந்த சிந்தனை.

**சொ:** அது என்னப்பா ?

**ஆரி:** அதுவா! சொர்ணத்தமிழ்நாடு எனக்கு சொந்தமாக வேண்டும். ஆனால்தான் வழுக்குத்தலை வாழ்வு வசந்த சோலையாகும். சூருவளி ஒயும் - சுந்தரத் தென்றல் பாயும்,

**கிட்:** அப்பத்தான் நம் குருஜி, நஞ்சை வாழ்வில் இப்படி நாட்டியம் ஆடுவார்.

**சொ:** ஏது! இயற்கையின் தலைநகரமான இன்பத்தமிழகத் தைப்பிடிக்கவில்லையென்றால் பைத்தியம் ஏறிவிடும் போலிருக்கிறது.

**கிட்:** பைத்தியந்தானே! ஏறட்டும்; ஏறட்டுமா? பைத்தியமா? கூடாது ! கூடாது ! !.

**ஆரி:** நீ சும்மா இரு. சொர்ணு ! நாளை முகலாயன் அரண்மனையில் நாட்டியப்போட்டி ஒன்று நடைபெறவிருக்கிறது. அதில் நீ கலந்து கொள்ள வேண்டும். கலந்துகொண்டு முகலாயன்மீது கண்வலை வீசி கவர்ந்து கொள்ள வேண்டும். கவர்ந்து கொண்

டால், என் கருத்துப்படி நாம் காணப்போகும் வெற்றிக்கே கால்கோள்விழா நடத்தியதாக இருக்கும். இதன்பொருள் முகலாயனை அடிமையாக்கிக்கொண்டால் அவனையே ஆயுதமாகக் கொண்டு அரிதினும் அரிதாகிய தமிழ் நாட்டு அரியாசனத்தை அடைந்துவிடலாம் என்பதுதான். இதுமுடியும்வரை, சொர்ணு! என்இதயம்—பெருது உதயம்,

சொ: அப்படியானுல் உங்கள் விருப்பமானப்பாதையில் நான் விரைந்து போகத்தயார். எனக்கும் உடலில் சிரசுபிரதானம் - உலகநாடுகளில் தமிழரசு பிரதானம்,

ஆரி: அப்படியானுல் கருநாகன் வாயில் கடும்விஷமிருப்பது போல், கலங்காத வீரனிடத்தில் கத்தியிருப்பது போல், கள்ளன் கரத்தில் கன்னக்கோலிருப்பது போல் சொர்ணு என்னிடத்தில் நீ இருக்கிருய்.

கிட்: எமனிடத்தில் பாசக்கயிறு இருப்பதுபோல் என்னிடத்தில் நீதானிருக்கே—இதையும் சேர்த்துக்கொள்ளுமாறு குருமகானைக் கேட்டுக்கொள்கிறேன்.
[குனிந்து கைகூப்பி வணக்கம் செய்கிருன்.]

ஆரி: சரி-சரி, நல்ல நாட்டியமாக இரண்டு சொர்ணுவுக்கு ஞாபகப்படுத்து.

கிட்: நல்ல நாட்டியம் என்ன குருஜி நடராஜா "டான்ஸே" சொல்லி விடுகிறேன்.
[நடராஜரைப்போல் கால்களைத்தூக்குகிருன்]

காட்சி:- 2.

இடம்:- முகலாயன் அரண்மனை (முகலாயன், கபூர், ஆரியகுரு, சொர்ணு, கிட்டு, இன்னும்பல முக்கியஸ்த்தர்கள்)

(முகலாயன் அரியணையில் அமர்ந்துக்கொண்டிருக்கிறான். சொர்ணு மிக அழகாக ஆடுகிறாள். முடிகிறது)

**ஆரி:** எப்படி நாட்டியம் ?

**முகலா:** நாகன் படமெடுத்தாடினால் சொல்லவாவேண்டும். மேகமெனஆடி மேனியைச் சிலிர்க்கவைத்தாள். குயில்பாட மயில்ஆடினாலும் இந்த எழிலிருக்காது, இளங்கொடியின் இன்பநாட்டியம் என் இதயத்தில் இன்னும் நடந்துக்கொண்டேயிருக்கிறது. கபூர்! நீயும் சொல் எப்படிநாட்டியம் ?

**கபூர்:** நாட்டியமா இது ! நண்பா ! நண்டுகாலின் நாட்டியத்தை நன்றாயிருக்கிறது என்று நான் சொல்ல மாட்டேன். நாட்டியத்திற்கும் இந்த அம்மைக்கும் வெகு தூரம்-நடந்தது மகா கோரம்-என்மேல் கொள்ளாதே காரம்.

**முக:** உன் ஞானக்கண்ணுக்கு சீ—சீ உன் பூனக்கண்ணுக்கு ஞானக்கண் பூனக்கண் இதில் எது மட்டம் என்றே தெரியவில்லையே ! எதுங்க மட்டம் ?

**ஆரி:** பூனக்கண்.

**முக:** ஆமா-ஆமா உன் பூனக்கண்ணுக்கு அப்படித்தானிருக்கும். நாட்டியவாணியே இதோ பரிசு. [ஆரிய குருவைப்பார்த்து] நீங்கள் நீலமேகனின் நிழல், கைலாயத்தின் கைகாட்டிமரம் என்று கேள்விப்பட்டிருக்கிறோம்.

**கபூ:** மூக்காங்கயிறு போடவேண்டிய மூர்க்கத்தனமான மாடு என்றுகூட கேள்விப்பட்டிருக்கிறோம், நம்பவில்லை.

மூக: ஆம். இப்படி அமருங்கள். இன்றுமுதல் நீங்கள் இங்கேயே இருக்கவேண்டும். இன்றைய தினம் ஓர் இன்பமான தினம்.

கபூ: இல்லை! இன்றைய தினம் ஓர் இழவுதினத்திற்குச்சமம்; இப்படி நான் சொல்லவில்லை; பஞ்சாங்கம் சொல்லுகிறது; கோபம் வேண்டாம்,

ஆரி: சொன்னால் பரவாயில்லை. மன்னவா! நான் ஆண்டவனுக்கு அடிமை-அதனால் நீங்கியிருக்கிறது எவ்வளவோ மிடிமை. ஆகவே நீரும் அவன் ஆசிகிடைக்க பூசியுங்கள். ஏனென்றால் பக்திதான் சொர்க்கம் செல்லும் மார்க்கம்-பரலோகத்தின்பாதை.

கபூ: இல்லை—அதுபாழ்இடத்தின் பாதை! பக்தி ஒரு பைத்தியம்; புத்தியே அதற்கு வைத்தியம் என்று அந்த காலத்து, நா-கா-கீ, நாகாகீ! சீ-சீ, நானே சொன்னதாக வைத்துக்கொள்ளப்பா.

ஆரி. அப்பன் யார் ?

மூக: ஆப்தநண்பன்

கிட்: உங்க நண்பன்—பெரிய வம்பனுங்க.

மூக: அதைப்பற்றி கவலைவேண்டாம். நீங்கள் காட்டிய பாதையில் கண்ணை மூடிக்கொண்டு போகிறேன். நீங்கள் சொல்வது பொன்மொழி-அதுவேஎன்வழி.

கபூ: நண்பா எந்தவழி போனாலும் சிந்தித்துத்தான் போக வேண்டும். சிந்திக்கத்தெரிந்தவன்தான் மனிதன். என்னப்பா நீயார்? பெயர் என்ன?

கிட்: நான் இவர் சிஷ்யன்! பெயர்—சின்ன பெயர்—மூன்றே எழுத்து.

கபூ: மூன்றே எழுத்தா! கழுதை, பன்றி ஒவ்வொன் றிற்கும் எத்தனே எழுத்து.

கிட்: மூன்று எழுத்து.

கபூ: அப்ப உன் பெயர் கழுதையா? பன்றியா?

கிட்: என்னங்க அது?

காட்சி:- 3.

இடம்:- மலர்வனம். (சிற்றரசன்) சேரன்.

சேர: தென்றல் தேகத்தைத்தழுவுகிறது. நறுமணம் நாசியை நன்ருக சூழுகிறது. மல்லிகாவும் இப்போதிருந் தால்.........?

[கவனித்துக்கொண்டே மல்லிகா வருகிருள்]

மல்: கண் கொட்டாமல் எந்தக்காட்சியை நோக்கியிருந்தீர்?

சேர: காய்ந்த உள்ளத்தால் காவேரி உன்னேத்தான் நோக்கி யிருந்தேன். மல்லிகா! வாட்டும் குளிரிலிருப்பவன் எதை நோக்கியிருப்பான்?

மல்: வானவனே நோக்கியிருப்பான்.

சேர: வாடிய மேட்டுப்பயிர்?

மல்: வான்மழையை நோக்கியிருக்கும்.

சேர: அதுபோல் சோர்ந்த உள்ளத்தால் சொக்கவைக்கும் சொர்ணச்சிலே உன்னேத்தான் நோக்கியிருந்தேன்.

மல்: பதீறுகோலத்தேடி பருவக்கொடிவருமலாப்போகும்?

சேர: தவருமல் வருவாய்என்று தெரியும் ஆனல் தாமதமாய் விட்டது. தாமதம் ஏனென்ருல்தாமரை வாடிவிடும்.

மல்: நேரம் ஏனென்ருல் நெஞ்சு வாடிவிடாது. இன்று என் அலங்காரம் எப்படி சொல்லுங்கள்

சேர: பொருள் நிறைந்த நூலுக்கு பொன் அட்டை.

மல்: இதற்காகத்தான் இன்று நேரமாய்விட்டது. சொல் லுங்கள் நம் இருவரின் கலப்பு?

சேர: சாரீரத்தில் சங்கீதமும், சந்திர ஒளியில் சரியானத் தென்றலும், சர்பத்தோடு சாரையும் கலந்தால் கேட்கவா வேண்டும். பேரின்பத்தின் பெட்டக மாகிய இல்லறத்தில் பெருமையோடு குடிபுகுந்து. பேரன்போடு வாழவே ஆசைப்படுகிறேன். திகட் டாதச்சுவை திருக்குறளில் இருப்பதுபோல் தீயாத காதல் என்னிடமுண்டு.

மல்: மாளாத தமிழே மாசற்ற என்காதலும் பழக்கவாசத்தி லிருந்து பண்பு வளருகிற காரணத்தால்.

சேர; மல்லிகா! கண்ணுடியைக் கண்டுபிடித்தவன் உன் கன்னங்களை கண்டபிறகுதான் கண்டுபிடித்தானே என்னமோத் தெரியவில்லை. சிமிட்டி சிமிட்டிபேசும் சீலநட்சத்திரங்கள் உன் சிறந்தவிழிகளிடத்தில்தான் சிமிட்டக்கற்றுகொண்டதுபோல்தெரிகிறது.மொக்கு போன்ற உன் மூக்கு என் மனதை தாக்கு கிறது. உதிரம் போன்ற உன் அதரம்பார்ப்பதற்கே மதுரமாக இருக்கிறது. நீ உலக காட்சி சாலையி லேயே உயர்ந்த அங்கம் வகிக்கும் உயிரோவியம்.

மல்: அதெல்லாம் அப்படியே இருக்கட்டும்! இதற்கு பதில்

சொல்லுங்கள்! அறிவு-அறிவு என்கிருேமே அறிவு என்ருல் என்ன ?

சேர: அறிவு-ஆறறிவு போடவேண்டிய அதிசயக்கண்ணுடி.

மல்: ஆராய்ச்சி?

சேர: அறிவு மேற்கொள்ள வேண்டிய அப்பியாசம்:

மல்: அனுபவம்?

சேர: அறிவு பயன்படுத்திக் கொள்ளவேண்டிய அரிய நற்சாட்சிப் பத்திரம்.

மல்: மனசாட்சி?

சேர: மனப்பள்ளியின் மட்டில்லா ஆசிரியன். மனசாட்சி மனிதத்தன்மையின் மறுபெயர்தான்.

[ஆமா-ஆமா என்றபடியே தின்னத்தூங்கி வருகிருன்]

சேர: ஓ! தின்னத்தூங்கியா?

தின்: தின்னத்தூங்கியேதான். அம்மா மல்லிகா உங்க இருவரையும் அக்கா சாப்பிடவரச் சொல்லிற்று.

மல்: சாப்பிடவா? சந்தோஷமாகப் பேசிக்கொண்டிருக்கும் போது சாப்பாடே தேவையில்லே.

தின்: அப்ப நீங்க நடத்துங்க நான்போய் சொல்லி விடுகிறேன்.

மல்: சொல்லிவிடுகிருயா? வேண்டாம்-வேண்டாம்

தின்: இல்லே இல்லே நீங்க நல்லா நடத்துங்க நான்போய்

சொல்லியே விடுகிறேன்.

**சேர:** தின்னத்தூங்கி வா இங்கே! இப்படி உட்கார்! மல்லிகா! கொஞ்சநாட்களாய் உன் அக்கா மகிழ்சி கொஞ்சமும் இன்றி மனவருத்தம் கொண்டிருப்பது ஏன்?

**மல்:** ஏனு! கண்மூடி முகலாயனுக்கு காலடிபணிந்தோம். என்பதற்கு அடையாளமாகக் கப்பம் கட்டுகிறோமே என்பதுதான்.

**சேர:** அப்படியானுல் அந்தகோமாளி மன்னனுக்கு நாங்கள் ஏமாளிகளல்ல, திறனற்றவர்களல்ல திறைகொடுக்க எனதெரிவித்துவிட்டு நம்வம்சம் பணியாதிருப்பதில் சிங்கத்தின் அம்சம். நமது தாயகம்—மானத்தின் நாயகம்என்பதை நிரூபிப்போம். மானத்தோடுவாழ்வதுதான் மனிதர்க்கழகு, இல்லையா தின்னதூங்கி?

**தின்:** இல்லை! ஏனென்ருல் மான—ஈனத்தைவிட்டு கெட்டவனு வாழத்தான் நான் ஆசைப்படுகிறேன்.

**சேர:** அடப்பாவி! நீ அறிவோடுதான் பேசுகிருயா?

**தின்:** அறிவோடுமட்டுமல்ல அனுபவத்தோடும் பேசுகிறேன். பொல்லாதவனுக்குக்குத்தான் இந்த உலகத்தில் பொன்னுன வாழ்வு.

**சேர:** பொல்லாதவனை நான் அடித்துக்கொல்லாமல் விடுவதில்லை. எனவே உன்னை இப்போது கொல்லப் போகிறேன்.

**தின்:** கொல்லப்போகிறீரு! வேண்டாம்-வேண்டாம் இனி நான் நல்லவனுகவே நடந்துகொள்ள ஆசைப் படுகிறேன்.

**சேர:** அதெல்லாம் முடியாது.

**தீன்:** ஐயையோ! என்னை கொல்லாதீங்க என்குலத்துப் பேரைக் கெடுக்க இல்லே இல்லே எடுக்க நான் ஒருவன்தான் இருக்கேன். வேணுமென்றால் காலை பிடித்துக் கொள்ளுகிறேன.

**சேர:** பக்தா!

**தீன்:** சாமி!

**சேர:** எழுந்து வா.

## காட்சி:- 4.

இடம்:- முகலாயன் அரண்மனை,(முகலாயன்,கபூர்,சொர்ணு கிட்டு.)

**(முகலாயனிடம் மதுக்கிண்ணத்தை நீட்டுகிறுன் கிட்டு, வாங்கிக் குடிக்கிறுன் முகலாயன்.)**

**முக:** என்னடா பானம் என்று பச்சைத் தண்ணீரைக் கொடுக்கிறுய். பச்சைத்தண்ணீரையும் பருவமங்கையர் கொடுத்தால் பழரசமெனப் பாவிப்பேன்.

**கிட்:** அதற்காக "டா" என்று சொல்ல வேண்டுமா? இனி மேல் கொஞ்சம் மதிப்பா கூப்பிடுங்க.

**கபூ:** நண்பா! மதிப்பா கூப்பிடச் சொல்லுகிறுர், இனி மதிப்பா மச்சான் என்று கூப்பிடு.

**முக:** சரி, என்ன மச்சான் சௌக்கியமா?

**கிட்:** என்ன மாமனுரே பெண் கொடுக்கறீங்களா?

முக: மாமனுரா? போடா—போ.

சொ: மதுக்கோப்பையை இப்படி கொடுத்து விட்டுப்போ. இந்தாங்க நீங்க குடியுங்க. நீங்க குணத்தில் குழந்தை குறும்பில்-தூரங்கு.

முக: ஆஹா! உன் இன்பக்கரங்கள் பட்டதும் இது இனிக்கிறது. உன்னைப்போன்ற தளிர் வதிகள் தங்கள் தங்கக்கைகளால் தண்ணீரைக் கொடுத்தாலும் எனக்கு தாய்ப்பால்தான்.

கபூ: ஆமா—ஆமா உன்னைப்போன்ற எழிலரசிகள் எட்டி—எட்டி உதைத்தாலும் ஐயாவுக்கு முத்தம் கொடுப்பதைப்போலவே இருக்கும்.

முக: ஆம். என்ன? எட்டி—எட்டி உதைத்தாலும் முத்தம் கொடுப்பதைப் போலிருக்குமா? தூ-தூ ரம்பையே உதைத்தாலும் என் ரத்தம் கொதிக்கும் கபூர். இனி மேல் இப்படி சொல்லாதே. சொர்ணு! ஒரு ஆணிடம் ஒரு பெண்ணிருப்பது, அறிவினிடம் அனுபவம் இருப்பதர்க்குச்சமம் ஆகவே இனி நீ என்னிடம் இருக்கவேண்டும். நீ சுற்றிப்பார்க்கவேண்டிய சுந்திர வனம்-நீயே எனக்கு ஈடற்ற தனம்.

(சொர்ணுவைச் சுற்றி—சுற்றிப்பார்க்கிருன் கபூர்.)

முக: நண்பா என்ன பார்க்கிருய்?

கபூ: சுற்றிப்பார்க்கவேண்டிய சுந்திரவனம் என்ருயேசுற்றிப் பார்க்கிறேன்.

(ஆரியகுரு வருகிருர்)

முக: வாரும்-வாரும் இப்படி அமரும். "தேய்ந்த வாழ்விலே தேம்பியழும் என் மக்கள் தென்றல் வாழ்வில் தெம்

மாங்கு பாட தாங்கள் ஒரு வழி சொல்லவேண்டும்.

ஆரி; மன்னவா; பட்ட வாழ்வு மக்களிடமிருந்து நீங்க-பட்டு வாழ்வு அங்கேதேங்க பாண்டியநாட்டை நீகைப்பற்றவேண்டும் பாண்டிய நாடு பாலைவனமல்ல! பழமுதிர்ச்சோலை. வரண்ட பூமியல்ல! வண்டல் படிந்த நாடு. சகலவளங்களுக்கும் சாச்சாத் அந்தநாடே உவமை.

கபூ: சொல்லப்போனல் அம்மையாரைப் போலவே அழகு வாய்ந்தது அந்த நாடு.

சொ: ஆம். இளமை என்னிடம் தாண்டவமாடுவதுபோல் இன்பநஞ்சை அங்கே தாண்டவமாடுகிறது. முல்லை என் கருங்கூந்தலை அலங்கரிப்பதுபோல் முத்துக்கள் அங்கே கடலை அலங்கரிக்கின்றன.

கபூ: ஆனல் நாடு என்றுபோனல் நாக்கை அறுத்துவிடுவார்கள். அப்படிப்பட்டவர்கள் அடிபணிந்தோம் என்பதற்கு அத்தாட்சியாக கப்பம் கட்டுவார்களா என்று கேட்கலாம், அவர்கள் கப்பம் கட்டுகிருர்கள் என்ருல் ஒரு திருட்டுச் சாமியின் குருட்டு உபதேசத்தை நம்பி-போர்செய்வதையே வெறுத்து.

ஆரி: இது வீண்பேச்சு.

கபூ: இதுவா வீண்பேச்சு! நண்பா புத்திசாலிக்கு எதிர்பதம் என்ன?

முக: மடையன்.

கபூ: அது நான் இவர்-அதுவேதான்.

முக: கபூர்........?

கபூ: கோபம் கொடிது, உள்ளத்தில் உண்டாகும் உஷ்ண நோய், சகலவற்றையும் சாம்பலாக்கும் சர்வாதிகாரி அது வேண்டாம். சொல்லுங்கள் எப்படி இது வீண்பேச்சு? பதில் சொல்ல முடியவில்லை என்றல் வாபஸ் வாங்கிக்கொள்ளுங்கள் இல்லையானல் நான் அறப்போர் நடத்துவேன்-அறப்போர்.

ஆரி: ஆத்திரம் வேண்டாம் நான் வாபஸ் வாங்கிக்கொள்ளுகிறேன். ஆனலும் நீங்கள் கேளுங்கள் அவர்கள் வாய் வீரம் பேசுவார்கள் நாம் வரட்சியடையக் கூடாது! ஆரம்பத்தில் அரிமாவைப்போல் ஆடுவார்கள் பிறகு ஆமைபோல் அடங்குவார்கள்; கொடும் விரியனைப்போல் சீறுவார்கள் பிறகு கொக்குகளாய் விடுவார்கள்.

கபூ: இந்த படுமோசப் பண்புகளுக்கெல்லாம் நாமே பலமான எடுத்துக்காட்டு

முக: நீ இப்படி பேசிக்கொண்டிருந்தால் வெளியே அனுப்பி விடுவேன்.

கபூ: என்னை அனுப்புவதைவிட பயப்படாமல்•பகிரங்கமாகச் சொல்லுகிறேன் நண்பா இவர்களை அனுப்பி விட்டால் நாம் உருப்படுவோம் அல்லா...! என் நண்பனுக்கு அறிவைக்கொடு. [போகிருன்.]

## காட்சி:- 5.

இடம்:- பாண்டிய நாட்டு அரண்மனை. (ராணி, மந்திரி.)

ராணி: ஒரு கண்மூடிச் சாமியாரின் கவைக்குதவா பேச்சிலே கருத்தைப்பறிகொடுத்து, கையாலாகாத முகலாயனுக்குக் கப்பம் கொடுத்து கன்னித் தமிழகத்தின்

பெருமையின் மீதே கரிபூசிவிட்டேன்-இணையற்ற வம்சத்திற்கு இழிவைத்தேடிவிட்டேன்

(மந்திரி வருதல்.)

**மந்தி:** கண்ணாடியில் தூசுபடிந்திருப்பதைப்போல் கனிமுகத்தில் துயரம் படிந்திருக்கிறதே. கவலை கண்ணில் கண்ணீருக வழிகிறதே காரணம்?

**ரா:** காரணம்! கப்பம் கட்டி கன்னித்தமிழ்நாட்டுச் சரித்திரத்திலேயே கறையேற்படுத்தி விட்டேன். பரம்பரைப் புகழ் பட்டுப் போயிற்று. தமிழ்நாட்டுச் சரித்திரமே தலைகீழாக மாறிவிட்டது

**மந்:** அதற்காக?

**ரா:** ஆவியைக் கொடுத்தேனும் அவமானத்தைத் தடுக்க வேண்டும்.

**மந்:** திறை கொடுக்க மறுத்தால் முகலாயன் திரண்டு வருவானே போருக்கு.

**ரா:** திகைக்காமல் தீரத்தோடு வரவேற்கிறேன்! தினவு தோள்களுக்குத் திருப்தியளிக்கிறேன்! தீட்டிய வாள்களுக்குத் திகட்டாத விருந்தளிக்கிறேன்! தீய்ந்து கிடக்கும் போர்களத்திற்குத் தீர்த்தமளிக்கிறேன்! திகிலற்ற வீரர்களுக்குத் தித்திப்பான சந்தர்பமளிக்கிறேன்.

(சேழியன், சேரன், மல்லிகா, தின்னத்தூங்கி, வருகின்றனர்.)

**மந்:** போர்..........

**சேழி:** பொம்மை விளையாட்டு என் வீரர்களுக்கு. அன்னை நாட்டிற்குண்டான அவமானத்தைத்துடைக்க ஆவி

யை இழக்க நேர்ந்தாலும் ஆனந்தப்படுகிறோம் என்ற அளவுக்கு ஆண்மையுடைய வீரர்களுக்கு அமர்க்களமே அற்புதக் கனிச்சோலைதான். மானம் போன பிறகு மயானம் போ வ து தா ன் மனிதத் தன்மை என்ற மணிமொழிக்கு மரியாதைதரும் மாவீரர்கள், சூடுசுரணையோடு சுதந்திரச் சூரியனாக வாழுவோம் இல்லை சுடுகாட்டில் சுகத்தைக் காணு வோம் என்கிற சுத்த வீரர்கள் களம் என்பதற் காகக் கலங்க மாட்டார்கள்.

**மல்** ஒருசமயம் வீரம் எங்கள் ரத்தஓட்டம்—வீழ்ந்து பணிய மாட்டோம் என்று விவேகமாக வாழ்ந்தத் தமிழகத் திலே பிறந்த நாம்! தன்மானத்தை விளக்குவதற்கு தனிப்பெரும் வேதமாக – தலைசிறந்தக் கீதமாகத் திகழ்ந்த தண்டமிழ் மண்ணிலே வாழ்கிற நாம்! மானில மென்னும் மலர்த்தோட்டத்தில் மனோரஞ் சிதமாயிருந்த மறவர் செல்வங்களாகிய நாம், திறை கொடுப்பது முறையல்ல.

**மந்:** அப்படியானால் கப்பம் இனிமேல்....?

**சேர:** கட்டமாட்டோம்! கட்டாயம் கட்டமாட்டோம்!! கன விலும் கட்டமாட்டோம்! கற்பனையிலும் கட்டமாட் டோம். நீக்குவோம் கறை—அல்லது நிலத்துக்கு ஆவோம் இறை. உண்டானக்கறையை உதிரத்தால் கழுவநேர்ந்தாலும் உள்ளங்கலங்காதவர், மறப் போரிலே மார்படிப்பட்டு மாண்டுபோவதை மாபெ ரும் பாக்கியமாகக் கொ ண் ட வ ர் **தமிழர்** என்று பண்பாடுகிற நாம் கப்பம் கட்டலாமா, கட்டக் கூடாதா என்று ஆலோசிப்பதே அவமானம்!

**தின:** ஆம்! வீரப்பேச்சு—விவேகமூச்சு —விண்ணிடிபோன்ற சொல் வீச்சு-தமிழன் உடைமையாச்சு என்று பேசு கின்ற நாம் ஆலோசித்துக் கொண்டிருப்பதே அவ மானந்தான்.

**மந்:** அப்படியானல் முடிவு?

**ரா:** மானத்தை நிலைநாட்ட வேண்டும், அல்லது மரணத்தில் நிம்மதி காண வேண்டும். தின்னத்தூங்கி! நீ இப்போதே சென்று இனிநாம் கப்பம் கட்டோம் என்று முகலாயனுக்கு அறிவித்துவிட்டு வா, போ!

**தின்:** நல்லது.

## காட்சி:- 6.

இடம்:- முகலாயன் அரண்மனை. (முகலாயன், சொர்ணு, கபூர்.)

**(முகலாயன் மதுக்கோப்பையை சொர்ணுவிடம் நீட்டியபடி)**

**முக:** இன்னும் ஊற்று, சரசவிளையாட்டிற்கு சக்தி, காம வுணர்வுக்கு கடுமையான ஓட்டம் கொடுக்க இதனல் முடியும். இது சர்வசக்தி வாய்ந்த சஞ்சீவி சாரம்—நிலவுலகில் நிகரற்ற நீராகாரம்—உண்டால் இதுவே பெரும் உபசாரம்.

**கபூ:** ஆம். சொட்டு நாக்கில் பட்டாலே சொர்க்கத்தில் நடமாடுவதாகத் தெரியும்! குடி! விழுந்து சாகும்வரை ஊம்: தூங்கும் வரை குடி.

**சொ:** கண்கள் சிவந்து விட்டனவே காரணம்?

**முக:** உணர்ச்சியின் வேகம்-உள்ளத்தின் தாகம்-உன்மேலுள்ள மோகம். நீதான் மோடிசெய்யும் மோகனக் கண்ணழகியாயிற்றே. சொர்ணு; உன் மேனி தித்திக்கும் சீனி! உன்நடை மயிலின் அடை-முகமோ பொன்னிலவின் ஜாடை.

சொ: எழில்வர்ணனை எல்லையின்றி போகிறதே!

கபூ: ஏந்திருப்பதோ மது! எதிரிலிருப்பதோ மாது! ஏனம்மா போகாது?

முக: கபூர்! மானிலத்தில் மகிழ்ந்து வாழ மது, மாது இரண்டும் போதும்.

கபூ: அதனால் எனக்கும் ஒரு டோஸ் போடச்சொல்.

முக: சரி ஊற்று. (சொர்ணு ஊற்றுகிருள். கபூர் குடித்து விட்டு.)

கபூ: பெண்ணே! நீ ஒரு கிளி—உன் தேகத்திலே தவழ்கிறது ஒருதனி ஒளி. நீ இந்த நிலவுலகில் ஒரு நிலவு! கொண்டாய் என் மனதைக்களவு— வா! வா!!

முக: நண்பா! இதென்ன வேலை?

கபூ: இதுதான் நண்பா மதுவின் வேலை. பெண்ணே! உன் கவரும் யௌவ்வனம் – கைலாசப் பூங்காவனம்; கடைக்கண்பார்வை – காமத்தின் கோர்வை, மயக்குமொழி மதனகல்பம். வா! வா!!

முக: போடா முட்டாள். (தள்ளுகிருன்.)

கபூ: நண்பா! உதிரம் கொதிக்கப்பேசி உலர்ந்துவிட்டது வாய். பட்டைரசம் ஊற்றினுல்தான் பண்பட்டு வரும் எனவே இன்னெரு டோஸ்.

முக: முடியாது-முடியவே முடியாது, நீ கொஞ்ச ஆரம்பித்து விடுவாய்.

**(ஆரியகுருவும்-கிட்டுவும் வருகின்றனர்.)**

ஆரி: மன்னவா! காரமான வாழ்வில் கனிரசம் பாய வேண்டுமானல் கன்னித்தமிழ் நாட்டைக் கைப்பற்ற வேண்டுமென்று கங்கணம் கட்டிக்கொண்டீரா?

கபூ; கட்டிக் கொண்டார்.

ஆரி: சபாஷ்!

கபூ: கனவில் தான் கட்டிக்கொண்டார் அதற்குள் சபாஷ் போடுகிறீர்.

முக: நினவிலோ, கனவிலோ அந்த உறுதி கொள்ளவே என் உள்ளம் நடுங்குகிறது.

ஆரி: அரவம் அரணைக்கு அஞ்சத்தேவையில்லை. சிற்றெறும்பைப்பார்த்து சிங்கம் பயப்படுகிறது என்ருல் சிரிப்பார்கள். கடைசியாகச் சொல்லுகிறேன் பகர்ந்துவிட்டேன் வழியை-பயன்படுத்தும் விழியை.

முக: கபோதிஎனக்கு கைத்தடி நீங்கள்தானே. பார்ப்போம்.

கபூ: நண்பா! இதை நீ கவனிக்கவேண்டும். ஒன்று—இது முரங்கத்தடி! தாங்காது இரண்டு—தமிழர்களிடம் தண்டுக்கிறங்கிஞல் தலைதப்புவது தம்பிரான் புண்ணியந்தான். மூன்று — ஊம் . ஒன்றுமில்லை. நான் வருகிறேன். (போய்விடுகிருன்.)

**(தின்னத்தூங்கி வருதல்.)**

தின்: பாண்டிய நாட்டிலிருந்து அம்மை பாண்டியராணியாருல் அனுப்பப்பட்ட தூதுவன் நான். கப்பம் இனிகட்டோம் என்பதை அறிவிக்கும்படியே அம்மையாரால் அனுப்பப்பட்டேன்.

முக: கப்பம் கட்டமாட்டீர்களா? காரணம்?

**தின்:** காரணம் சொல்லும்படி ஏதும் சொல்ல வில்லை.

ஆரி; கப்பம் கட்ட வில்லை என்ருல் களத்தில் சந்திக்கநேரும். என்ன முகலாயரே?

**முக:** கட்டாயம்.

**தின்:** அமர் என்ருல் அலர் கொள்பவர்களல்ல நாங்கள்; ஆலோசித்துச் சொல்லுங்கள்! சமர் என்ருல் சங்கைத்தேடுபவர்களல்ல நாங்கள்; சற்று யோசித்துரையுங்கள்!

**முக:** அடக்கு உன் ஆணவப்பேச்சை! போர் என்ருல் நாங்களும் பொந்துகளைத் தேடுபவர்களல்ல! எங்களுக்கும் வீரம் உண்டு. தமிழர்கள் பேச்சில் பெரியவர்கள், செய்கையில் செல்லாக் காசுகள், வீரமில்லா விபூதிப் பட்டைகள்! ஒ ... விபூதி நீங்களும் போடுகிறீர்கள் கோபம் வேண்டாம்.

**தின்:** பல்லற்ற பாம்பு படமெடுத்தாடுவது பரிதாபந்தான்.

**கிட்:** பல்லற்றபாம்பு! இப்படி நீ சொல்லக்கூடாது **அப்பனே**.

**தின்:** இப்படி நீ சொல்லக்கூடாது **மகனே.** (போகிருன்.)

## காட்சி:- 7.

இடம்:- பாண்டிய நாட்டு அரண்மனை. (ராணி, சேழியன், சேரன், மந்திரி.)

**ராணி:** இன்னும் தின்னத்தூங்கியை காணவில்லையே.

**(தின்னத்தூங்கி வருகிருன்.)**

**தீன்:** கப்பம் கட்டவில்லை என்றால் கடும்போர் விளையு மென்று கர்ஜிக்கின்றான் முகலாயன். நம்மை எலிக் குட்டிகளாக மதித்து எக்காளமிடுகிறான்! கோழிக் குஞ்சுகளாகக் கருதி கொக்கரிக்கிறான்! ஈசல் பூச்சு களாக எண்ணி இறுமாந்து போசுகிறான். நாம் வாய்ப் பேச்சில் வல்லவர்களாம், காரியத்தில் கபோதி களாம்.

**ராணி:** அவன் அப்படிப்பேசும்போது நீ ஆந்தையாகவா இருந் தாய்? எழும் புலி எனத்தாக்காமல் எருமைபோல் நின்றுகொண்டா இருந்தாய்? வர்மத்தால் வைதவன் ரத்தத்தை வாளுக்கிறையாக்க வகையில்லையா உனக்கு? சாவுப்படுக்கையில் சக்தியற்று சாய்ந்துக் கிடக்கிற சமயத்திலும், சத்ருக்கள் சரிதவறிப் பேசி னால் சர்பமாக மாறும் சந்ததியிலே சனித்தவனல் லவா நீ? மரண தேவதையிடம் மன்றாடிக் கொண் டிருக்கிற நேரத்திலும், மாற்றான் மரியாதைக்குறை வாகப் பேசினால், மதகளிறாக மாறும் மறத்தமிழச்சி மகனல்லவா நீ?

**சேழி:** தானென்ற திமிறினால் தாறுமாறாகப் பேசியவனை தாக்கிக்கொல்லாமல் வந்த உனக்கு தமிழனென்று சொல்ல தகுதியுண்டா? ஆதவனாக வாழக்கருதி அடிபணிய மறுத்தவர்களை அவதூறானப் பேசசுக் களால் அக்கினிப்போல் சுட்டவனை அடித்துக் கொல்லாமல் அசல் பேடியாக வந்த உனக்கு அரு மைத் தென்னாட்டிலே வாழ அருகதையுண்டா? அந்த செறுக்கனைத் தாக்கி நீயே செத்திருந்தாலும், பெற்ற இனத்தைப் பெருமை படுத்தினாய் என்று பேரானந்தம் கொள்வோமே.

**தீன்:** தொன்றுதொட்ட மான உணர்ச்சித் தொலைந்துபோக வில்லை. தூதுவனாகச் சென்ற நான், அவன் செப்பு வதைக்கேட்டுவர வேண்டுமேத்தவிர வேறெதுவும் செய்யக்கூடாதென்பதை மறந்து பேசுகிறீர்கள்.

நான் மட்டும் தூதுவனுகச்சென்றிருவிட்டால் அந்த துஷ்டனைத் தூக்கிப் பந்தாடிருப்பேன். திமிர்பிடித்த அவன்உதிரத்தை தீர்த்தமெனக் கொண்டுவந்திருப் பேன். தாழ்ந்தவனுமல்ல! தளர்ந்தவனுமல்ல! தாம திக்காமல் தாருங்கள் கட்டளை. காட்டாறுபோல் கனத்தில் சென்று கர்வம் பேசியவன் கழுத்தை முறித்து, காலை ஒடித்து, கண்டதுண்டமாக்கி, பொடிகளை எல்லாம் பொருக்கிவருகிறேன், பொருட் காட்சி சாலையில் வைக்க!

**ராணி:** போதும்! தளபதி; தயாராகட்டும் போர்ப்படை! ஆண வக்காரனை அலையெனத்தாக்குவோம். சுடுஞ் சொற்களைக் கொட்டியவன்மீது சூறுவளியெனப் பாய்வோம். பங்கத்தைப்போக்க அவன் அங்கத்தை நொறுக்குவோம். நீக்குவோம் கறை; அல்லது நிலத் துக்கு ஆவோம் இறை.

**மந்:** கோபநெஞ்சம் கொந்தளிக்கும் கடல்! அமைதி பெருங் கள்!

**சேர:** ஆத்திரமகல, அமைதியடைய ஆணவக்காரன் செந் நீர் ஆருய் ஓடவேண்டும். தாறுமாருகப் பேசியவன் தலையைத்தள்ளினுலொழிய தனலான எங்கலுள்ளம் தடாகமாகாது. துடுக்குத் தனமாகப் பேசிய துன் மார்க்கனைத் துண்டித்தாலொழிய தூக்கம் பிறக் காது. விசச்சொற்களைக் கக்கியவனை வீழ்த்தினு லொழிய விம்மியழும் எங்கள் நெஞ்சம் விருந்துண் ணுது.

**சேழி:** மேலும் நாம் பொன்னை வேண்டி போர் தொடுக்க வில்லை, மண்ணைவேண்டி மாற்ருனை மரிக்கமுயல வில்லை, மாதரைவேண்டி மானத்தையிழக்கவில்லை, சுயுநலம் கொண்டு சூது செய்யல்லை, தன் மானத் தைக்காக்க ஓர் தர்மப்போர்.சிந்தனை தேவையில்லை! சீக்கிரம் போவோம்! சீரிப்பாய்வோம்! சிரசைக்

கொய்வோம்! சிந்தை மகிழ்வோம்

மந்: ஆலோசிக்காமலேயே பேசுகிறீர்கள்.

ரா: அவமானத்தை அடித்துத்துரத்த ஆலோசனை அவசியமில்லை. காட்டைப்பார்த்து கற்பகச்சோலை கர்வமாகப் பேசலாம், செல்லாக்காசைப்பார்த்து செல்வாக்கானத்தங்கம் செறுக்காகப் பேசலாம், ஆனால் நீர்ச்சோலையைப்பார்த்து நிழலற்றப்பாலையும், மூலிகைத் தோட்டத்தைப் பார்த்து முள் தோட்டமும் முறையற்றுப் பேசுவதா?

சேழி: அதிலும் வீரத்தை விளக்க விந்தியத்தையும், வியாபாரத்தை விளக்க ரோமையும், மதுரமானத்தமிழை விளக்க மதுரையும், கற்பை விளக்க கண்ணகிச் சிலையையும், தித்திப்பான அறிவைவிளக்க திருக்குறளையும், நானிலத்திற்கே நாகரிகத்தை நவின்றோம் என்பதற்கு நற்சாட்சிப் பத்திரமாக நற்கலையையும் கொண்டுள்ள நம்மைப்பார்த்தா கேவலமாகப் பேசுவது?

சேர: எனவேதான் சுனைபோன்ற எங்களுள்ளம் சூரியமண்டலமாய்விட்டது, கொதிக்கும் கொப்பரையான உள்ளம் கொடைக்கானலாக வேண்டுமானால் கொடியவனைக் கொல்லத்தான் வேண்டும்.

தின்: ஆம்! அவன் நஞ்சூறிய நாக்கை நறுக்கத்தான் வேண்டும். இறுமாப்பிற்கு இருப்பிடமான இருதயத்தை இந்த வாளுக்கு இறையாக்கத்தான் வேண்டும். போக்கிரித்தனமானப் புத்தியை பொக்கிஷமாகக் கொண்ட தலையைப் பொடி—பொடியாக்கத்தான் வேண்டும்.

மந்: இது எனக்கு பிடிக்கவில்லை. எனவே அவன் பேசியதை மறந்துவிடுங்கள்.

**சேழி;** அடித்திருந்தால் கூட அப்பொழுதே மறந்திருப்போம் அவமானம் செய்துவிட்டான் அழியும் வரை மறக்க மாட்டோம். வாளைக்கண்டதும் வந்தடிப்பணியக் கூடியவன் வர்மத்தால் வசைபாடிவிட்டான், துளி ரத்தத்தைக் கண்டதும் துடைநடுங்கிச் சாபவன் துர்வார்த்தைகளால் சுட்டுவிட்டான், நீரோ மக களிறென விழச் சொல்லாமல் மானைப்போலிருக்கச் சொல்லுகிறீர்! மாநாகனைப்போல் பாயச் சொல்லா மல் மழலைபோலிருக்கச் சொல்லுகிறீர்.

**ரா:** மந்திரியாரே; கதிரவனிருக்கும் போது தான் கண்கள் துள்ளுகின்றன! கடுமிருள் கப்பிக்கொண்டால் துடிக்கின்றன. அதேபோல் அவனும் கோட்டை யிலே துள்ளுவான் கொடுஞ்சமரிலே துடிப்பான்' அணைபோடாமல், ஆசிகூறுங்கள்.

**மந்;** நல்லது.

**தின்:** புறப்படுங்கள். வண்டமிழ் நாட்டான் வன்நெஞ்சத் தைக்காட்ட வரமான சந்தர்ப்பம் வாய்ந்து விட்டது. வாளுக்கு வேலை கிடைத்த நாள், நம் வாழ்க்கை யிலே பெரும் திருநாள்.

(மல்லிகா வருதல்)

**மல்:** அக்கா! அக்கா!

**ரா:** மல்லிகா: மானங்காக்கப்போகிறோம் மடைபோடாதே

**மல்:** விஷயமென்னக்கா?

**ரா:** தங்கையே! நம் தமிழ்நாடு?

**மல்:** தர்மத்தின் தாய்வீடு, தன்மானத்தின் தலைநகரம்!

ரா: தமிழகத்தின் பண்பு?

மல்; தங்கமான வசந்தகாலம். தரணிமக்களுக்கேதலைசிறந்த பாடபுத்தகமாகக்கூடிய அளவுக்கு தகுதிமிக்கது.

ரா: தமிழர் உள்ளம்?

மல்: தர்மத்தின் இல்லம்—அங்கு கிடையாது கள்ளம்.

ரா: தமிழ்க்கலை?

மல்: தரணிகலைக்கு வைத்தியசாலை.

ரா: தமிழ்மொழி?

மல்: தாம்பூலம் (இயல், இசை, நாடகம்-வெற்றிலை, பாக்கு, சுண்ணும்பு.) தாரணி மொழிகளுக்குத் தாய்.

ரா. வள்ளுவர் குறள்?

மல்; வையகத்திற்கு ஓர் வழக்கு மன்றம்.

சேழி: இவ்வளவு சிறப்பிருந்தும் இறுமாப்பால் முகலாயன் இழிவாகப் பேசிவிட்டான். நந்தமிழ் மக்களேயே நாற்றக்குட்டையின் நச்சுப்புழுக்கலாக எண்ணி விட்டான்.

சேர ஆகவே மனம் நோகப்பேசிய அவனை மண்கட்டிபொன நொறுக்கப்போகிறோம்.

மல்: போதும்உங்கள் வீரப்பேச்சு. (அனைவரையும் முறைத்துப்பார்க்கிருள்) அ வ தூ றா க ப் பேசிய அந்தச் சணமே பாயாமல் ஆலோசனை மண்டபம் அமைத்துக்கொண்டீர்கள். வீம்புபேசிய விஞடியே விரியன்களாகி வீழ்த்தாமல் விழுதுபோல் நின்று கொண்

டிருக்கிறீர்கள். உங்கள் கட்டையில் ஓடுவது காரம் நிறைந்த ரத்தமா அல்லது கலங்கிப்போன சாக்கடை நீரு; மண்ணிலே சாய்ந்தேனும் மாசைப் போக்கும் பண்பு மாண்டா போயிற்று?
வையகத்திற்கே வாய்மையானப் பொது நூலாக வள்ளுவர் குறளை வழங்கியிருக்கும் வண்டமிழ் நாட்டான் மீது வசை! தத்தளித்து வருபவர்களுக்கு தாயகத்தையே தர்மசத்திரமாக்கும் தமிழன்மீது தகாத வார்த்தை இனி பேசிப்பயனில்லை. புறப்படுங்கள், தமிழ்த்தடாகத்து தங்கத்தாமரைகளை தாழ்வாகக்கருதிய தறுக்கனை தாள்பணியச் செய்வோம்.

## காட்சி:- 8.

இடம்:– முகலாயன் அரண்மனை (முகலாயன், சொர்ணு.)

**முக:** (மது அருந்திக்கொண்டே) மது அருந்துவது மகாதீது. குடி—நல்ல தேகநிலைக்கு ஒரு விஷக்கடி. மது குடிப் பவனைப்போன்ற மடையனே கிடையாது.

**சொ:** நீங்களே குடிக்கிறீர்களே.

**முக:** நான் குடிக்கிறேனு? அப்ப நான் மடையன்-மடையனே தான். ஊம் நீவா.

**சொ:** இருங்கள்.

**முக:** இருக்கமுடியாது பெண்ணே! இது பருவ உணர்ச்சியின் பதை பதைப்பு, வாலிபத்தின் வம்பு—மதுவின் மாராத பண்பு. வா! கொச்சை மொழிபேசி இச்சைய திகமூட்டி—பச்சைகிளிபோல் விளையாடும் நீ !

சோ: நான்?

முக: அழகு தேவதையின் அடையாளச் சிருஷ்டி; இயற்கை முடித்த இன்பப் பூமாலை; நீ ஒரு சித்திரப்பாவை—உன் இதழோ கோவை!

சோ: ஊம்! என் அலங்காரம்?

முக; அழகான துளிருக்கு அந்தி வெய்யல். சொர்ணா; கத்தியால் வெட்டிய பம்பரத்திற்கு கலர்பூசினாலும் கவர்ச்சி தோன்றுமா?

சோ: என்னங்க முன்னுக்குப்பின் முரணாகப் பேசுகிறீர்கள்.

(கபூர் அலறியவனாக அவசரமாக வந்து)

கபூ: அப்படி பேசவில்லையானால் மதுவின் பெயரே கெட்டுவிடுமே: நண்பா! போர் நடக்கும்போதுகூடவா மோகத்திலிருப்பது? எனம்மா! நீயாவது கத்தியைக்கொடுத்து களத்திற்கு அனுப்பக்கூடாதா? எப்பொழுது பார்த்தாலும் என் கண்கள் எப்படி, என் மூக்கு எப்படி, என் (வயிற்றின்மேலடித்து) கொப்பை எப்படி என்று கேட்டுக் கொண்டே இருக்கிறாயே நீ நன்றாக இருப்பாயா ? நண்பா! போர்க்களத்தில் குருதி வெள்ளத்தைப் பார்க்கும்போது என் குலை நடுங்குகிறதே. நம் வீரர்கள் ஆ—ஆ என்று சாய்வது என்னை அக்கினியில் தூக்கிப்போடுவதுபோல் இருக்கிறதே--நண்பா!

முக: அடியாரைக் கூப்பிடு.

கபூ: அவனுக்கு கத்தியைப் பிடிக்கவே தெரியாதே நண்பா; என் கண்கள் சுற்றுகிறதே.

முக: பயப்படாதே; அவர்கள் ஒழியத்தான் போகிறார்கள், நாம் ஓங்கத்தான் போகிறோம்: அவர்கள் மீது மண் மழை—நம்மீது மலர் மழை.

**கபூ:** அது இந்த ஜன்மத்தில் முடியாது; அடுத்த ஜன்மத்தில் வேண்டுமானல் ஊம் அப்பகூட முடியாது. நண்பா! குலை குலையாகக் காய்த்த மாந்தோப்பில் குரங்குகள் நுழைந்தால் எப்படி இருக்கும்?

**முக:** மாங்காய்கள் பட்டு, பொட்டு என்று விழுந்து கொண்டே இருக்கும்.

**கபூ:** அதுபோல்தான் நம் வீரர்களின் தலைகள் விழுந்துகொண் டிருக்கின்றன.

**இப்போது சேழியன், சேரன், வீரர்களுடன் வருகின்றனர். சொர்ணு ஓடி விடுகிருள். கபூருப், முகலாயனும் கைது செய்யப்படுகின்றனர்.**

## காட்சி:—9

இடம்:—பாண்டிய நாட்டு நீதி மன்றத்தில் கைது செய்யப்பட்ட முகலாயனையும், கபூரையும் ராணி விசாரிக்கிருள்.

**ரா;** சூரர்களை சுண்டெலிகளாக மதித்த, சுண்டைக்காய் நெஞ்சத்தவரே!

**மல்:** வீழ்ந்து பணிய மறுத்த விவேக சிந்தாமணிகளை, வீரமற்ற பேடிகளாகக் கருதி வீம்பு பேசியவரே!

**தின்:** இப்போது சொல்லும்.

**கபூ:** அப்போதே சொன்னேன் கேட்டாயா? என் பொன்மொழி களை எல்லாம் புண் மொழிகளாக நினைத்தாயே; ஒருவர் கேட்டாலும் பாதகமில்லையே, மாறி மாறி கேட்கிருர் களே, அட அல்லா!

**ரா:** என் பேசாமல் இருக்கீறீர்? சிங்கங்களாகத் திரிய நினைத்த எங்கள் மீது பங்கங்களாகவே தீச் சொற்களை வீசிய

வரே சொல்லும்! இணையற்ற மானத்தைக் காற்பதிலே நாங்கள் ... ?

முக: இமயம் வட எல்லையைக் காற்பதுபோல் கார்க்கிறீர்கள்!

தின்: நாங்கள் அமர்களத்தில் புகுவது ....?

கபூ: அழகான கரும்புத்தோட்டத்தில் யானை புகுந்தால் சொல்லவா வேண்டும்! பட் பட என்று கரும்பு ஒடிவதுபோல் எதிரிகளின் எலும்பு ஒடிகிறது.

தின்: நீ சொன்னால் போதுமா? உன் மன்னர் சொல்லட்டும்!

முக: நான் மட்டும் என்ன சொல்லப் போகிறேன், ஏதோ போதை மிகக் கொண்டு போக்கிரித்தனமாகப் பேசி விட்டேன், பொருத்தருள வேண்டும்

ரா: வீழ்ந்தவர்களை விட்டுவிடுவதுதான் வீரத்தமிழர் பண்பு—ஆனால்...

கபூ: ஆனல் போட்டு அவஸ்த்தைப் படுத்தாதீர்கள், வேண்டுமானல் நாங்கள் கட்டுகிறோம் கப்பம்.

ரா: கப்பம்: வாங்கமாட்டான் தமிழன்! பிறர் சுகத்தை சுரண்ட, பிறரை அடிமைகொண்டு ஆட்டிப்படைக்க தமிழன் என்றுமே ஆசைப்பட்டதில்லை நீங்கள் போகலாம்.

கபூ: அப்பா! அல்லா உன் கருணையே கருணை!

தின்: நாங்கள் அய்யோன்னு விட்டா நீ அல்லாவையாக் கூப்பிடுகிறாய் பிடியுங்கள்.

கபூ: வேண்டாம்—வேண்டாம் நான் சொன்னது தப்பு! தப்பு!! தப்பு!!! (கன்னத்தில் போட்டுக் கொள்ளுகிறான்)

காட்சி:-10

இடம்:—முகலாயன் அரண்மனை (முகலாயன், கபூர், சொர்ணு.)

சொ: வந்து விட்டீர்களா வாருங்கள் மது அருந்துவீர்கள்.

முக: மதுவும் வேண்டாம் மண்ணுங்கட்டியும் வேண்டாம்:

கபூ: அம்மையாரே! மது இத்தனை நாட்கள் அன்னையின் பால் இன்று முதல் அலரிப்பால் அருந்தமாட்டான் என்ன நண்பா?

முக: ஆம்!

சொ: மதுதான் அப்படி என்ருல்—மங்கை நான்?

கபூ: மங்கை நீ இத்தனை நாட்கள் புஷ்பவல்லிக்கு, இன்றுமுதல் பூசனிக்கொடி. என்ன நண்பா?

முக: ஆம் கபூர்.

சொ: இத்தனை நாட்கள் சீனிரசமாயிருந்த மது, இன்று சிறு நீராய் விட்டது என்ருல், பூங்கொடியாய் இருந்த நான இன்று பூனைக்கந்தலானேன் என்ருல் அர்த்தமென்ன?

கபூ: எங்களை பிடித்த சனியன் ஒடு ஒடு என்று ஓடுகிறது என்று அர்த்தம்—என்ன நண்பா?

முக: ஆம், ஆம், ஆம், போதுமா?

கபூ: நண்பா! இதிலிருந்து உனக்கு புத்தி வந்துவிட்டது என்று அர்த்தம் இல்லையா?

முக: ஆம். என்ன சொன்ணுய்?

கபூ: ஒன்றுமில்லை.

சோ: கோப நெஞ்சம் கொடும்புயல் சூழ்ந்த காடு, அடங்கட்டும் என்று அறிவோடு பேசுங்கள். நந்தவனத்தில் நடமாடவிடுவதாகச் சொல்லி நடுகாட்டில் நலியவிடுவது நாசவேலை.

(ஆரியகுரு வருகிருர்)

ஆரி: என்ன இது?

கபூ: இதுவா? விசுவாமித்திரர் நாடகம். மகா கனம் கபூர் அதாகப்பட்டது நான்தான் தலைமை வகித்திருக்கின்றேன் நீங்கள்தான் நாடகத்தைக் கண்டுகளிக்க வந்திருக்கும் ஒரே ரசிகமணி.

முக: நீ பேசாதே. நீங்கள் பக்தியைப்பற்றி சொல்லுங்கள்

ஆர்: அப்படி கேளுங்கள்! பக்தி முக்தி அளிக்கும் சக்தி வாய்ந்தது பரமனை வசப்படுத்தும் பக்குவமே பக்தி. அமரலோகத்திற்கு அண்டியவரகளை அருகதையாக்கும் ஆசிரியர்களே, அடியார்கள்.

முக: கபூர். இதற்க்கு நல்ல சூடு கொடு

கபூ: சரி, பக்தி—பரமனுக்கே பச்சைத்துரோகம். மேலும் ஆண்டவன் என்ற சொல்லே ஆபாசம்—ஆனாலும் நடக்கிறது பல உபதேசம்—நம்பிப் பேகோதே மோசம்.

முக: ஐயாவைப் பார்த்து சொல்லடா எனக்கு அறிவு வந்து விட்டது.

ஆரி: உங்கள் மூளையும் கெட்டுவிட்டது. வெற்றி கிட்டாததால் வெறிபிடித்துப் பேசுவதா? தண்டில் தோற்றோம் என்ருலும் தந்திரத்தால் செய்துவிடலாம். தந்திரமே தலையாய பலம்

கபூ: நண்பா! ஐயாவிடம் மந்திரம்கூட இருக்கிறது.

முக: அப்ப! இவரிடம் இருப்பதைப் பற்றியும், இல்லாததைப் பற்றியும் சிறிது சொல்.

கபூ: அப்படியே, ஐயாவிடம் பட்டைநாமம் இருக்கிறது பண்பட்ட உள்ளமில்லை அதுமட்டுமா மண்டையிலே மண் இருக்கிறது மசாலா இல்லை.

ஆரி: சொர்ணு! இனி இங்கு இருக்கக்கூடாது வா போகலாம்.

சொ: போய் வருகிறேன்.

கபூ: போய் வருகிறேனு? போகிறேன் என்று மட்டும் சொல். பிறகு வந்தால் இடமில்லை. என்ன நண்பா?

முக: ஆம் கபூர். (அவள் போனபிறகு) கபூர்! மேகத்தைப் போல் தேகத்தையாட்டி மோகத்தை வளர்த்தவள் போகிருளே!

(பின் தொடருகிருன், கபூர் இழுத்து நிற்கவைக்கிருன்.)

கபூ: நண்பா; நாளை வடநாட்டு மன்னன் அரண்மனையில் பாட்டுப்போட்டி ஒன்று நடக்கப்போகிறது போவோமா?

முக: என்னுல் முடியாது கபூர்! அந்த போட்டியில் சொர்ணு மட்டும் கலந்துகொண்டால்....

கிட்டு வந்து,

கிட்; எங்கே என் குருஜி?

கபூ: உன்; குருஜி; ஒரு நல்ல இடத்திற்குப் போயிருக்கார், உன்னையும் வரச்சொல்லி!

கிட். எங்கே போயிருக்கார்? எங்கே போயிருக்கார்?

கபூ: எமலோகத்துக்குப் போயிருக்கார் போறீயா?

கிட்: போய்யா;

(போய்விடுகிருன் கிட்டு.)

## காட்சி:-11

இடம்:— வடநாட்டு மன்னனின் அரண்மனையில் சபா மண்டபம்

**வடநாட்டு மன்னன் சிம்மாசனத்தில் வீற்றிருக்கிருன். ஒரு பெண் பாடி முடிந்ததும் சொர்ணு பாடுகிருள் முடிந்ததும். (அந்தபுரத்தில்)**

ஆரி: பாட்டு எப்படி?

வ ம: தாலாட்டு குழந்தைக்கு பிடிக்காமல் போகுமா? ஆயிரக் கணக்காணச் செவிகளால் கேட்க வேண்டிய அருமை யானப் பாட்டு. நங்கையின் சாரீரம் வண்டின் ரீங்காரம். நவ வாத்தியங்களை மிஞ்சிடும் நதியின் சலசலப்பு.

ஆரி: நல்லது. கொற்றவனே உம் நாட்டை சுற்றிபார்க்க யாம் விரும்புகிரேம.

வ ம: தமிழகத்தைச் சுற்றிபார்க்க வேண்டும் என்று சொல்லுங் கள் அர்த்தமிருக்கிறது. காரணம்! அது வளத்தின் சுரங் கம்—இது வரண்ட சுடுகாடு. இது மோசமான நாடு அது மோகனமான நாடு அருமையான அந்த நாட்டிற்கு அரசனுக இல்லாமல் பாழும் இந்த சுடுகாட்டிற்குக் காவ லனுக இருக்கிறேன்.

கிட்: மகா கனம் ஹரிச்சந்திர மகாராஜா இருந்ததைப் போலத் தானே?

ஆரி: ஆமா, நீ சும்மா இரு. அப்படி என்ருல் அந்த அழகான நாட்டின்மீது உமக்கு அளவிலாத ஆசைபோலிருக்கிறது,

வ ம: கரும்புத் தோட்டத்தின் மீது களிருகளுக்கும், பழமுதிர்ச் சோலையின் மீது பச்சைக்கிளிகளுக்கும், வண்ணமலர்ச் சோலையின் மீது வண்டினங்களுக்கும் ஆசை இல்லா மலாப் போகும்.

கிட்: ஆனல்—ஆசை ஆபத்தானது ஆச்சே.

ஆரி: எந்த மடையன் சொன்னது?

கிட்: நீங்களேதான், ஆசைகொள்வது அடாது—ஆபத்தானது என்று. ஆனலும் அரசே! என் குருஜி தந்திரம் செய்வதில் தன் நிகரற்ற பயில்வான், தலைவாசல் பக்கமாக அழைத்துப்போக முடியாவிட்டாலும் தழக்கடைப்பக்கமாக அழைத்துப் போவார் திருடனைப்போல.

வ ம: எப்படியோ; இன்று முதல் நாம் நண்பர்கள். இன்று நான் நரியின் முகத்தில்தான் விழித்திருக்க வேண்டும்.

கிட்: அப்ப; நரி ஒன்று கொண்டுவரட்டுமா, தினமும் அதன் முகத்திலேயே விழிப்பீர்கள்.

வ ம வேண்டியதில்லை (குருவைப் பார்த்து) எனக்கு எப்படியும் சொந்தமாக வேண்டும் தமிழகத்தின் முடி—இல்லையேல் ஏற்பட்டுவிடும் மரணக் கடி—ஏன் என்றல் எனக்கு அது தான் உயிர் நாடி.

சொ: இப்படிச் சொல்லும் உங்களுக்கு அந்த நாடு சொந்தமாகிவிட்டால் சொர்கம் கிடைத்ததாகவே கருதுவீர் போலிருக்கிறது.

வ ம: சொர்கமென்ன — அதைவிட — அதைவிட உயர்ந்ததாக என்ன இருக்கிறது.. ஊம் சொர்கம் கிடைத்ததாகவே கருதுவேன்.

சோ: சந்தேகம் வேண்டாம்! நிச்சயம் அவர்களுக்கு கட்டிவிட லாம் பலிபீடம்—உங்களுக்கு கிட்டிவிடும் கிரீடம்—பலிக் காமல் போகாது இந்த என் ஆருடம்

வ ம: ஆனால் ஒன்று; சண்டை உண்டாகும் தூரத்திற்குப் போகாமலேயே சாதிகக வேண்டும். சண்டை எனக்கு சற்றும் பிடிப்பதில்லை.

கிட்: உங்களுக்காவது பிடிப்பதில்லை, எங்களுக்கு அவர்கள் சண்டைக்கு வரப்போகிறார்கள் என்றாலே பாதி உயிர் போய்விடும். புறப்பட்டு ஆயிற்று என்றால் முக்கா உயிர் போய்விடும், பாதிதூரம் வந்துவிட்டார்கள் என்றால் செத்தே விடுவோம்.

வ ம: கேலிபேசாதே. விருந்துண்போம் வாருங்கள்.

காட்சி:-12

இடம்:— பாண்டியராணியின் அரண்மனைப் பூங்கா.

(சேரன்—மல்லிகா)

சேர: மல்லிகா; வந்து விட்டாயா?

மல்: இளையுகிர் காலத்திலிருந்து இன்ப வசந்த காலத்திற்கு வர இச்சை இருக்காதா? தனிமையில் இருக்கிற நேரம் எனக்கு தாங்கமுடியாத கோரம். எனவே கோரவந்தேன் ஒரு வரம்—இந்தக் கடவுளிடம்.

சேர: அப்படியா! பக்தே உன் பக்தியை மெச்சினேன். உனக்கு என்ன வரம் வேண்டும் கேள். இந்தக் கரம்—தயங்காமல் தரும் வரம்.

**மல்:** சுவாமி; நான் உங்கள்மேல் கொண்டுள்ள காதல் காயாத கடல், காலமெல்லாம் இருக்கும் கல்லெழுத்து. எனவே என்னை மணம் செய்து கொள்ளுங்கள்

**சேர:** பெண்ணே: சந்தோஷத்தால் நிரம்ப வேண்டும் உன் அகம்—அதுவே என் சுகம். ஆகவே உன்னை மணம் செயதுக் கொள்ளுகிறேன்.

**(இதையெல்லாம் கேட்டுக்கொண்டே வருகிருன் தின்னத்தூங்கி)**

**தின்:** சுவாமி அடியேனுக்கும் ஒருவரம் வேண்டும்

**சேர:** கேள் பக்தா! கேள். இந்தக்கடவுள் வரங்கொடுக்கும் வள்ளல்.

**தின்:** சுவாமி; உங்கள்மேல் கொண்டுள்ள காதல் காயாத கடல் காலமெல்லாமிருக்கும் கல்லெழுத்து. எனவே என்னை மணம் செய்து கொள்ளுங்கள்;

**சேர:** நானு! உன்னையா; அட ஆண்டவா; இந்த வரம் கொடுக்க முடியாது பக்தா.

**தின்:** முடியாது என்ருல் மரம் போன்ற இந்தக் கரம் விடாது ஆண்டவா விடாது

**சேர:** ஐயையோ நான் ஆண்டவன் இல்லேப்பா சேரன்-சேரன்

**மல்:** தின்னத்தூங்கி; கிண்டல் செய்கிருயே இந்தக் கேள்விக்கு பதில் சொல் பார்க்கலாம். வாய்மையானக் காதல் .. ?

**தின்.** இது சர்வசாதரணமானக் கேள்வி, ஒரே வார்த்தையில் பதில் சொல்வேன்.

**மல்:** சொல் பார்க்கலாம்?

திின்: சொல்லிவிடுவேன்.

மல்: சொல்;

தின்: தெரியாதே.

சேச: வாய்மையானக் காதல் வற்றாத ஊற்று. வாழ்வை வசந்த காலமாக்கும் வலிமை வாய்ந்தது. வையமே எதிர்த்தாலும் வளையாத வைரம் பாய்ந்தது.

மல்: ஊ-ஊம் இல்லறம்?

சேர: ஆணும் பெண்ணும் அமைக்கும் அரியதோர் கூட்டுறவுச சங்கம்—இணைந்து போனால்தான் இன்பம் அங்கே பொங்கும்.

மல்: துறவரம்?

சேர: வாழ்க்கையின் அருமையறியா வறிஞனின் குகை. தின்னத்தூங்கி இதுபோல்-நீ பதில சொல்ல அறிவுவேண்டும்.

தின்: அறிவா? அறிவு என்றால் என்ன!

சேர: என்னவா? அறிவு—ஆறறிவின் நோயைத்தீர்க்கும் அற்புத வைத்தியம். ஆராய்ச்சி செய்து பார் தெரியும்.

தின்: ஆராய்ச்சியா! அப்படி என்றால்... ?

சேர: சரிதான்; ஆராய்ச்சி அறிவு அமர்ந்து ஆட்சிபுரியும் அரியணை.

மல்: கல்வி?

தின்: இது ஒரு கேள்வியா! கல்வி என்றால் படிப்பு—படிப்பு என்றால் கல்வி! எப்படி?

சோ: நன்றாக இருக்கிறது ஆனைப்பார்; கல்வி பகுத்தறிவு ஏந்திப் போகவேண்டிய பசும் பொன் விளக்கு. உலகத்திற்கு கதிரவன் ஒளி கொடுக்கிறன்—உள்ளத்திற்கு கல்வி ஒளி கொடுககிறது

தின்: எனக்கு ஒன்றுமே தெரியவில்லையே. என் மண்டையில் மூளை இருக்குமா? இருக்காதா?

மல்; மூளை என்னமோ கட்டாயம் இருக்கும். நீங்கள் சொல் லுங்கள்; மொழி .. ?

தின்: நான் சொல்லுகிறேன், மொழி—இதயப் பதிப்பகத்தின் இன்ப வெளியீடு,

மல்: அட—ஒ! சரி; இலக்கண்ம்?

தின்: இலக்கணம்; இலக்கியத்திற்கு போடப்பட்ட இன்பவேலி.

சேர: பரவாயில்லையே! உன் மண்டையில் மூளை நன்றாக வேலை செய்கிறதே!

[தலையை நோகும்படி தட்டுகிருன்]

தின்: உன் பாராட்டு விழா இதுதானு; நான் போகிறேன்.

காட்சி:—13

இடம்:— வட நாட்டு அரண்மனை.

[வடநாட்டு மன்னன், கிட்டு, ஆரியகுரு; சொர்ணு]

ஆரி: மன்னவா! நம் நினைவுக்கோட்டை நிஜக்கோட்டையாக வெகுநாள் ஆசை வெற்றிவிழா நடத்த ...

கிட்: நம் ஆசையெல்லாம் தோசையாகமலிருக்க, என்ன செய்ய வேண்டும என்ருல் ... என்ன செய்யவேண்டும் குருஜி? எனக்குத் தெரியவில்லை.

**வ ம:** தெரியவில்லையா? தெரியாதவன் தெரிந்தவன்போல் என் பேசினுய்? முட்டாள் நாயே! முரட்டு ஜன்மமே.

**கிட்:** போடா கழுதை; இப்போது உன்னை என்ன செய்கிறேன் பார், உன் மண்டையை உடைத்து மாவிளக்குப் போடு கிறைன். உன் தோலை உரித்து தொண்டலம் தைக் கிறேன். உன் ஊனை எடுத்து ஊறுகாய் வைக்கிறேன்.

**வ ம:** என்னையா திட்டுகிருய்? [அடிக்க ஓங்குகிருன்]

**கிட்:** இருங்க—இருங்க; இப்படி எல்லாம் நீங்க என்னை திட்டி ஞலும் எனக்கு கோபம் வருது; நீங்க நல்லவர் என்று சொல்லுகிறேனுங்க.

**வ ம:** அப்படியா! அப்ப சொல்.

**சொ:** நீங்கள் கேளுங்கள்: பாண்டிய நாட்டு அரியாசனத்தை உமக்கு உரியாசனமாக்க—மாட்சி மிக்க அந்த இடத்திலே உம்மை காட்சியளிக்கச் செய்ய என் தந்தையால் முடியு மென்ருலும்; நீங்கள் முகலாய மன்னனின் நட்பையும் பெறவேண்டும்.—பெற்றுவிட்டால்! அவன் படையும் உதவிக்கு வரும்—வந்தால்.... ஒரே கணம் — பாண்டிய ராணி பிணம் இதைத்தான் என் தந்தையும் சொல்ல வாடுெத்தார் ஆரம்பித்தில்.

**வ ம:** அங்ஙனமாயின் இப்பொழுதே சென்று முகலாய மன்ன னின் நட்பை பெற்று வருகிறேன். (போகிருன்)

(அவனையே பார்த்துக்கொண்டிருந்த குரு, அவன் மறைந்ததும் சொர்ணுவைப் பார்த்து)

**ஆரி:** சொர்ணு! நம்மனதிலே கட்டிய கோட்டைகளை இந்த மண்ணுலகத்திலே கட்டிவிடலாம். மகிழ்ச்சியை கட்டி அணைக்கலாம்.

கிட்: குருஜி! இந்த ஆசை ஆண்டிகட்டும் மடமானல் என்ன செய்வது? கெடுமதி—சுடும்வழி என்றுகூட சொல்லு வீர்களே.

ஆரி; கிட்டு! இந்த ஆண்டி கட்டும் மடம்—ஆவது திடம். பயம் வேண்டாம்.

கிட்: குருஜி! சத்தியமா உங்க தலைமேல் அடித்து (அடிக்க ஓங்கி சுருவாச்சே என்று கையை இழுத்துகொண்டு) எனக்கு பயம் என்னமோ கிடையாது.

## காட்சி:-14

இடம்;—முகலாயன் அரண்மனை. (முகலாயன் கபூர்)

முக: நண்பா! காலம் வாய்த்தபோது கலை மானின் மீது பாயும் கழுகைப்போல் தமிழர்களின்மீது பாயவேண்டும், என்ன சொல்லுகிருய்?

கபூ: அடிபட்டும் உனக்கு அறிவு வரவில்லை என்று சொல்லு கிறேன். நண்பா! இது முதல் குற்றமாகையால் மன்னித்து விடுகிறேன்,

முக. கபூர்! கவலைக்காற்றில் காற்ருடியாய் இருக்கிற நான் களிக்க கட்டழகியாவது ஒருவள் கட்டாயம் தேவை.

கபூ: இது என்ன இரண்டாவது குற்றம் – இனி குற்றம் செய்தால் நான் ஆளே மாறிவிடுவேன்!

முக: மாறிவிடு—பெண்ணுக மாறிவிடு இப்படி கட்டியணைத்துக் கொள்ளுகிறேன்.

கபூ: விடு—விடு. என்னப்பா தொல்லையாகப் போயிற்று.

காவலன் ஒருவன் வந்து வட நாட்டிலிருந்து வட நாட்டு மன்னர் வந்திருக்கிருர் என்கிருன்.

கபூ; கோலமயில் கூட்டத்தில் கோழிக்கு என்ன வேலை?

முக: நண்பா; அவன் வரவு வசந்தம், பலனைக் கொண்டுவரும் பருவக் காற்று—வரச்சொல்.

(வட மன்னன் வருதல்)

வ ம: வானளாவ வளர்ந்துகொண்டே இருக்கிறது தமிழர்புகழ்! எனவே வளரும் அந்தப் புகழை வதக்கவேண்டும். இது என் ஆசை.

முக: வதக்கவேண்டியதுதான்.... அவர்களுக்கிருக்கும் மதிப்பை மாருக்காசாக்க வேண்டியதுதான் ஆனல்....

கபூ: போர் என்ருல் மார்தட்டி வரும் பேர்வழிகளாய் அவர்கள் இருப்பதால். அது முடியாது.

வ ம: இது வீண் நம்பிக்கை; நாம் கூடிவிட்டால் அவர்களை குப்புரச் சாய்க்கலாம்—எமலோகத்திற்கு ஏற்றுமதி செய்ய லாம் அதுவும் இந்தககாலத்தில் பல்லியும் பாம்பாகிறது, நாயும் நரியாகிறது.

கபூ: நாங்கள் அடிபட்டு அனுபவத்தில் சொல்லுகிருேம்; எங் கள் பேச்சை அவசியம் கேளுங்கள்.

வ ம: அப்படியேயானுலும் அவர்களை தந்திரத்தால் தள்ளி விடலாம். தந்திரமே இக்கால மந்திரம்.

கபூ: தந்திரம் செய்து தட்டிவிடும் பழக்கம் எங்களிடமில்லை. சதிவாளாகிய தங்களுக்கு சானை கொடுக்கச் சம்மதிக்க மாட்டோம். என்ன நண்பா?

முக: என்ன கபூர்...

கபூ: ஆம் என்று சொல் நண்பா.

முக: ஆம். ஆம்.

வ ம: நீர் தயவு செய்து பேசாதீர். வஞ்சகத்தாலும் அவர்களை வாரிவிட முடியாது என்று நீங்கள் நினைக்கிறீர்களா?

முக: ஆம்.

வ ம: சூழ்ச்சியால் அவர்களை நிச்சயம் சுருண்டுவிழச் செய்ய முடியும்.

முக: ஆம்

வ ம: என்ன எல்லாவற்றிற்கும் " ஆம் " போடுகிறீர்!

முக: ஆம்.

வ ம: நல்ல ஆம். நான் வருகிறேன். (போய்விடுகிறான்)

கபூ: நண்பா! ஐயா வந்துபோனதை ராணியிடம் சொல்வோமா?

முக: சொல்வோம் புறப்படு.

## காட்சி:—15

இடம்:—வடநாட்டு அரண்மனை (கிட்டு, ஆரிய குரு)

**ஆரியகுரு வருவதைப் பார்த்து, கிட்டு வா - வா என்று அமர்ந்து கொண்டு ஆழ்ந்த பக்தியில் ஈடுபட்டிருப்பது போல் பாசாங்கு செய்கிறான்.**

ஆரி: டேய் கிட்டு!—டேய்!

கிட்: யாராடா அவன் மடையன்.

ஆரி: எழுந்திருடா கழுதை.

கிட்: பாவி; பக்திக்கு படுமோசம் செய்யாதே. சோர்விலா பக்தியே சொர்கத்தின் விலை — சோதாவைப் போல் இடாதே தலை — சொட்ட அறுத்திடுவேன் வாலை.

ஆரி; சீ—கழுதை எழுந்திரு.

கிட்: கழுதை—கழுதை என்று சொல்லுகிறாய்! நீ கழுதையாகப் போ. பன்றியாகப்போ — அதுவாப்போ — இதுவாப்போ. போ—போ. ஓ—ஓ குருஜியா! மன்னிக்கனும். மன்னர் வருகிறார்.

ஆரி: போன வேலை....?

கிட்: எரிக்கும் வெய்யலில் அகப்பட்ட எருமைக்கடாவைப்போல் இருக்கிற இவரைப்பார்த்தால் எண்ணிப்போன வேலை ஏழுவழி போயிற்று என்றுதான் தெரிகிறது,

வ ம: தெரிகிறது என்ன? அப்படியேதான்; நரிக்கூட்டத்தில் நாணயமான மான் நட்பு கொள்ளாதென்ற முறையில் நடந்து கொண்டான். நம் நட்பை நஞ்சாக, நேசத்தை நெருப்பாக நினைக்கிறான்.

ஆரி: மடையன்! இந்த நாயின் நட்பில்லாவிட்டால், நம் திட்டம் நடக்காமல் போகுமா? நாசமாய் விடுமா? நீங்கள் நம்பிக்கையை நலியவிடாதீர்.

வ ம: என் நம்பிக்கை அழியாத பச்சம்—நலியும் என்று நீங்கள் கொள்ளாதீர்கள் அச்சம். ஆனால் ஒன்று; முகலாயன் என்னிடம் பேசிவிட்டு பாண்டியராணியிடம் போனான்.

கிட்: பாண்டியராணியிடம் நீங்கள் கேட்டதை சொல்லத்தான்

போயிருப்பான். குருஜி! அவன் போய் சொல்லிவிட்டால் பாண்டியராணி நமக்கு பாடைகட்டி விடுவாளே! பாடை கட்டி விடுவாளே!!

**ஆரி:** சனியன் பிடித்தவனே நிறுத்து உன் ஒப்பாரியை. (வட மன்னனைப் பார்த்து) அவன் பாண்டிய ராணியிடம் பகரத்தான் போயிருப்பான்.

**கிட்:** அப்ப! என் கழுத்து போயிற்று. என் அருமை கழுத்தே!

**ஆரி:** அச்சப்படாதேடா [வடமன்னனைப்பார்த்து] இப்பொழுதே (ரகசியமாகச் சொல்லிவிட்டு) வீரன் ஒருவனை அனுப்புவோம்.

**வ ம:** சமயத்திற்கேற்ற சாமர்த்தியமான யோசனை ஊனை நிலத்தில் இரங்கினேன் ஊன்றுகோலென உதவினீர்

**கிட்:** அட அறிவு கெட்ட நாய்களே. ஆணவம் பிடித்த பேய்களே. உங்களை அணுவணுவாக அறுத்தெறிகிறேன்—கந்தல் கந்தலாக கிழித்துப் போடுகிறேன் என்று பாண்டிய ராணி வந்தால் என்ன குருஜி செய்வது? எனக்கு அச்சம்—மிச்சமாக இருக்கிறதே.

**ஆரி:** அதற்கு என்னை கட்டிக்கொண்டு அழுகிருயா?

**கிட்:** ஆமா; குருஜி (அருகே போகிருன் கட்டியணைக்க)

**ஆரி;** சீ—சீ—சீ. [ஒதுங்குகிருன்]

**காட்சி:—16**

இடம்; —பாண்டியநாட்டு அரண்மனை;

**[ராணி, சேழியன், சேரன், மல்லிகா, தின்னத்தூங்கி.]**

**தின்:** (சேரனைப்பார்த்து) காதலுக்கும், காமத்திற்கும் நீ மட்டும்

நல்ல உவமை கொடுத்து விட்டால் நான் என் காதுகளை அறுத்துக் கொடுக்கிறேன்.

சேர: அறுத்துக் கொடுக்கிருயா? கேள்! காதல் ஒரு குழந்தை. காமம் ஒரு குரங்கு. சரிதானே? காதல் காலமெல்லாம் இருக்கும், காமம் கணத்தில் மாறும்.

ரா: உவமையும் கொடுத்து விட்டார். அதற்கு மேலும் சொல்லி விட்டார்.

சேர: காதுகளை அறுத்துக் கொடு. [காதுகளை பிடித்திழுக்கிருன். தின்னத்தூங்கி ஐயையோ எனறு அலறுகிருன்]

ரா: முகலாயர் வருகிருர், வாருங்கள்! அமருங்கள்!!

கபூ: சொல் நண்பா!

முக: எல்லாம் நீயே கபூர்.

கபூ: சரி. [கனைத்துவிட்டு] தமிழர் புகழ் தழைக்கிறது. மறவர் என்ருல் மானிலமே மலர்த்தோட்டமாக மதித்து மரியாதை தருகிறது. பொன்னுகக் கருதி போற்றுகிறது எனவே ஊற்றென சேரும் அந்தப் புகழை உலர்த்த வேண்டும் ஏன்? போர் செய்து அவர்களை பொடியாக்கி விட்டு அந்த பொன்னுட்டைக் கைப்பற்ற வேண்டும். காரியசித்திக்கு நீங்கள் கவசமாக கட்டாயம் உதவுங்கள் என்ருன் வடநாட்டான்: பாம்பு மனங்கொண்ட உனக்கு நாங்கள் பக்ககரமாக உதவமாட்டோம், உன் சினேகத்தை நாங்கள் சிலந்தி வலையாகக் கருதுகிருேம் என்று சொல்லிவிட்டோம் என்ன நண்பா?

முக: ஆம்.

ரா: தன் நப்பாசையைத் தீர்த்துக்கொள்ள உங்களையா "ஒத்தாசைக்கு" அழைத்தான். வெட்டுகிறேன் சூழ்ச்சிமிகக

அவன் இதயத்தை மூளை சிதற தட்டுகிறேன் பொருமை யால் பெருத்துப்போன அவன் மண்டையை. நீட்டு கிறேன் அந்த நாட்டு மக்களுககு கட்டாரியால் எழுதப் பட்ட என் தீர்ப்பை.

**சேழி:** அப்படித்தான் செய்யவேண்டும். நாற்றக் குட்டைகளை விட்டு வைத்தால் நாச வியாதிகள் நாளுக்கு நாள் வந்து கொண்டுதானிருக்கும். மேலும், சர்பத்தை வாழவிட் டாலும். சதிகாரனை வாழவிடக்கூடாது

**கபூ:** நான் சொல்வதுபோல் செய்யுங்கள். நாட்டின் அழகைக் கண்டு ஆசை கொள்ள காரணமாய் இருந்த அவன் கண்களை காய்ச்சிய இரும்பால் குத்துங்கள். நாட்டின் வளத்தை கேட்க உதவிய காதுகளில் ஈயத்தை காய்த்து ஊற்றுங்கள்.

**தின்:** தோழர் கபூர் அவர்கள் கொண்டு வந்த தீர்மானத்தை நான் முழுமனதுடன் ஆமோதிக்கிறேன்.

**கபூ:** அதற்காக தின்னத்தூங்கி அவர்களுக்கு என் நன்றியை ஆயிரம்முறை தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

**சேர:** பேசிப்—பேசி காலத்தை கழிக்காதீர்கள் இந்த வினாடியே செல்வோம். கொடுமை எண்ணிய அவனுடைய தேகத் தின் ஒவ்வொரு பாகத்திலும், தாழ்வின் மட்டத்தில் தள் ளக் கருதிய அவனுடைய உடலின் ஒவ்வொரு பிரிவிலும் தமிழ்த்தாயை கண்ணீர் விடச் செய்து. அதை பார்தது ரசிக்க நினைத்த அவனுடைய மெய்யின் ஒவ்வொரு அணுவிலும் துடிக்கும் தோள்களை, துருபிடித்த வாள் களை, துவண்டதேகிடையாது என முழக்கமிடும் கைகளை கோரப் பேயாட்டம் நடத்திவிடுவோம்.

**மல்:** புறப்படுங்கள் – புலியெனப் புறப்படுங்கள் ரத்தத்தில் குளிக்க புறப்படுங்கள். பிண மலை உண்டாக்க புறப் படுங்கள் வளமார் தென்னாட்டில் பிறந்தவர்கள் வம்புக் குப் போவதில்லை—வந்தவர்களை விடுவதில்லை என்பதை எடுத்துக் காட்ட புறப்படுங்கள்.

இப்போது வடநாட்டு மன்னனால் அனுப்பப்பட்ட வீரன் வருகிறான் ராணியிடம் மடல் ஒன்று தருகிறான்.

**ரா:** [படிக்கிறாள் மடலை.]

**பாண்டிய ராணி அவர்களுக்கு;--**

தோழியரே! தங்களுக்கும், முகலாய மன்னனுக்கும் நடந்த போரில், தாங்கள் வெற்றி பெற்றதன் மூலம் தமிழன்னையின் உடம்பிலிருந்த சேற்றைக் கழுவி, வெற்றி சந்தனத்தை பூசினீர்கள். அதனால் நான் அடைந்த பூரிப்பை விருந்தின்வழியாக புலப்படுத்த நினைத்தேன், அது சூழ்நிலை சிக்கலினால் கைவிடப் பட்டது. அதை இப்போது முடிக்க நினைக்கிறேன், வருமாறு மகிழ்ந்து அழைக்கிறேன்.

வட மன்னன்,

திலிப்.

[பேசுகிறான்] விருந்திற்கு அழைப்பவர் வீழ்த்த நினைப்பாரா?

**மல்:** வீழ்த்த முயல்வதாக இவர் சொல்லுவது விசித்திரமாகத் தான் இருக்கிறது!

**முக:** இதென்னடா வம்பு.

**ரா:** வம்பு! இல்லாததைச் சொல்லும் இழுக்குமனம் படைத் தவர்களே, போங்கள்! நவரசத்தை கக்குவதுபோல் நஞ்சைக்கக்கும் நாரதர்களே! நடந்துகாட்டுங்கள்!!

**கபூ;** வட நாட்டானை பொருத்தவரையிலும் உங்களுக்கு நம்பிக் கை என்ற சளி பிடித்துக்கொண்டது எங்கள் நாசுக்கா கச் சந்தன மணம் இப்போது உங்களுக்குத் தெரியாது. என்ன நண்பா?

**முக:** ஆம் கபூர், நீ வா: [போகின்றனர்.]

**தின்:** இனிமேல் இங்கு வந்தால்...?

**மல்:** நச்சுக்கால்வாயான மனதை நறுமணக் குளமாக்கிக் கொண்டு வரவேண்டும். அப்படித்தானே?

**தின்:** ஆம் கபூர்.

**மல்:** என்ன?

**தின்:** ஆம் கபூர்; ஐயையோ; அவர்கள் காற்று என்னையும் பிடித்துக்கொண்டது. கோவிக்காதே

**சேழி:** முகலாயர் சொல்வது உண்மை என்றே படுகிறது.

**ரா:** அங்கு போனால் எல்லாம் தெரிகிறது. (வடநாட்டு வீரனைப் பார்த்து) நாங்கள் புறப்பட்டு வருவதாக உன் மன்னரிடம் சொல், போ;

## காட்சி:—17

இடம்;— வடநாட்டு அரண்மனை.

**(ராணி, மல்லிகா, சேழியன், சேரன், தின்னத்தூங்கி, வடமன்னன்)**

**[விருந்து முடிந்ததும்]**

**வ ம:** முகலாயனிடம் நான் போர் தொடுக்கப் போகிறேன், தாங்கள் முழு ஆதரவையும் தரவேண்டும்.

**ரா:** போர் நடத்த பொருத்தமான காரணம் உண்டா?

**வ ம:** இல்லை.

**ரா:** அப்படியானல் ஆதரவு அளிக்கமாட்டோம்.

**வ ம:** கட்டாயம் கண்ணென உதவத்தான் வேண்டும்.

**சேழி:** முடியாது; தர்மகாரியங்களுக்கு தண்ணீர் ஊற்றத் தயங்க மாட்டான் தமிழன். ஆனல் நீதியற்ற காரியங்களுக்கு நிச்சயமாக ஊற்றமாட்டான்.

**வ ம:** உதவி கேட்கிறேன், உதாசீனம் செய்யாதீர்கள்.

**சேர:** நீர் ஆயிரம் முறை கேட்டாலும் ஆகாது என்று சொல்லைத் தான் கேட்க முடியும்.

**மல்:** வஞ்சகர் கைபிக்கு வாளாகும் வழக்கம், வலையாகும் பழக்கம் எங்களிடமில்லை. எங்கள் நாடு – அறத்தின் அன்னை வீடு—அக்கிரமத்திற்கு உதவி அடையோம்கேடு.

**(நீங்கள் உண்மையின் உருக்கள் என்று கிண்டலாகச் சொல்லி விட்டு கைத்தட்டுகிருன் வட மன்னன், வீரர்கள் வந்து அனைவரையும் பிடித்துக்கொண்டு இழுத்துப் போகின்றனர். போன சிறிது நேரத்தில் முகலாயனும், கபூரும் வருகின்றனர்)**

**வ ம:** வா! காட்டி அழைத்தப் பாதையில் கலந்துவர மறுத்து கடிந்து கொண்டவனே! வா! வா!!

**மு க:** காட்டுப்பாதையை கைலாச பாதையாக்க கருதி கலந்து போக அழைத்தவனே; வருகிறேன்! வருகிறேன்!!

**வ ம:** சரி, வந்தவேலையைச் சொல்;

**கபூ:** பாண்டிய ராணியை நாங்கள் பார்க்கவேண்டும்.

**வ ம:** குருடன் உலகத்தை பார்க்கமுடியுமானல்தான்! நீங்கள் அவளைப் பார்க்கமுடியும்.

கபூ: செவிடன் ஒலியைக் கேட்க முடியுமானல்தான் நாங்கள் இதை கேட்டுப்போக முடியும். என்ன நண்பா?

முக: ஆம் என்ற ஆயிரம்முறை சொன்னதாக வைத்துக்கொள் கபூர்.

வ ம: விஷப்பாம்போடு விளையாடுகிறீர்கள்.

முக. கீரிப்பிள்ளையோடு கிண்டல் செய்கிருய்

கபூ: நெருப்பிடம் நெருங்குகிருய், ஜாக்கிரதை. அதுவும் இந்த காலத்தில் மண் புழுவும் மலைப்பாம்பாகிறது, கடிக்காத எறும்பும் கருநாகனுகிறது இதுவும் நீ சொல்லிகொடுத்த பாடந்தான். என்ன நண்பா?

முக: இந்த விஷயத்தில் ஆம் என்ற வார்த்தையை தவிர வேறு வார்த்தையேக் கிடையாது—எனக்கு சொல்லவும் தெரியாது.

**[இப்போதும் வடவன் கைத்தட்ட வீரர்கள் வந்து இருவரையும் பிடித்துக் கொள்கின்றனர்.]**

கபூ: வீராதி வீரர்களே! சூராதி சூரர்களே!! பின்னல் வந்து பிடிக்கும் பேடி சிகாமணிகளே!!! தூ. (காரிதுப்புகிருன்)

வ ம: இழுத்துப்போய் கட்டுங்கள் இவர்களையும்.

**(இழுத்துப் போகின்றனர் ராணி முதலியவர்கள் கட்டப்பட்டிருக்கும் இடத்திற்கு. வட மன்னனும் பின்னல் போகிருன்)**

வ ம: (ராணியிடம்) பாலுக்கழும் கன்றுபோல் உதவிக்கழுதால் பத்தினி கற்பை கொடுக்க மறுப்பது போல் மறுக்கிறீர்கள். தாகமென வந்தவர்களுக்கு தடாகமானேம், அய்யோ பசி என வந்தவர்களுக்கு அன்னச்சத்திரமானேம் என்று மட்டும் பெருமை பேசிக்கொள்ளுகிறீர்கள்.

**ரா:** விருந்திற்கு அழைத்து விஷமத்தனம புரியும் வீணரே! வரலாற்றைக் கொஞ்சமும் அறியாமல் வார்த்தைகளைக் கொட்டாதே. களைத்து வந்தவர்களுக்கெல்லாம் கன்னித் தமிழகத்தைக் கற்பகச் சோலையாக்கிறோம் என்பதை இப்புவியே சொல்லும். தர்மம் செய்யும்போது தட்டிக் கொடுப்பதும், தவர் செய்யும்போது தடை போடுவதும் தமிழர் பண்பு.

**வ ம:** நிறுத்து. (ஓலை ஒன்று நீட்டி) இதோ இதில், உங்கள் நாட்டை என்னிடம் அடகு வைத்து நூறுகோடி பொன் வாங்கியதாக எழுதியிருக்கிறது, கையொப்பம் போடு.

**சேழி:** அன்னை நாட்டை அடகு வைத்ததாகக் கையொப்பம் போடுவதா? அடமானம் போட்டதாக எழுதிக் கொடுப்பதா? தங்கத் தமிழகத்தைப் பிடிக்க தவம கிடப்பவனே கேள்! தென்னகத்து மாதாவை அரச பீடத்திலிருந்து உருட்டிவிட்டு, ராசாங்க திருவோட்டைக் கொடுக்க எத்தனிக்கும் தீயவனே, கேள்!!

**தின்:** காதுகளை கத்தறித்து களிமண்ணை அடைப்பதற்குள் கவனமாகக் கேள்,

**சேர:** பெற்று வளர்த்த மண்ணின் மானத்தைக் காற்பதற்காக சின்னஞ்சிறு பாலர்களும் களத்திற்கு போகும் பரம்பரையிலே உதித்தவர்கள் நாங்கள் வேண்டுமானால் எங்கள் பூமியிலே புதைபட்டுக்கிடக்கும் அன்னியர்களின் எலும்புகளைக் கேட்டுப்பார். சொல்லும் இன்னும் தேவையானால் திருவிடத்து சேரன் காலததிலே ரத்த வெள்ளம் கலந்து ஓடியதாமே உன்னுடன், என்னென்று கங்கையைப் கேட்டுப்பார், அதுவும் சொல்லும். அத்தகைய எங்களை நாட்டை அடமானம் போட்டதாக எழுதிக்கொடுக்கச் சொல்லுகிறாய்.

**மல்:** பாவம்; வேங்கையின் உணவை இந்த வெறிநாய் தின்னப்

பார்க்கிறது. சாக்கடையில் புரளும் பன்றிக்கு சந்தனக் குட்டையின் மீது ஆசை பிறந்திருப்பது பரிதாபம்,

**கபூ:** ஐயையோ. இது சரியான சூடு—சாகும்வரை மறக்கமுடியாத சரியான சூடு

**வ ம:** மூடு வாயை, [எல்லோரையும் பார்த்து] தூண்டில் அகப்பட்ட மீன் துள்ளிப்பயனில்லை. சணத்தில் எழுதிக் கொடுங்கள் இல்லை சாவு கோரத்தில் நேரும் அப்புறம் கடும்புகையில் அகப்பட்ட கண்களைப்போல், இல்லை, கொதிக்கும் கொப்பரையில் போட்ட கொழுத்த கொழந்தைப் போல் தீய்ந்து விடுவீர்கள்—அழிந்து போவீர்கள்,

**ரா:** மிரட்டாதே. இம்சிப்பேன் என்பதற்காக இதயங் கலங்க மாட்டோம்! மாசற்ற எங்களுக்கு மரண ஓலை—ஒரு பெரும் வாழ்த்தோலை.

**மல்:** ஆம்; மானத்தைக் காக்கும்போது மரணக்கயிறை போட்டாலும் மலர்மாலை போட்டதாகவே கருதுவோம்.

**சேழி:** ஆம்; பண்பிற்கு பக்கபலமாய் இருக்கிற நோத்தில் பாடையிலே அனுப்பினாலும் பல்லக்கிலே அனுப்புவதாகவேப் பாவிப்போம்,

**சேர:** ஆம்; தர்மத்திற்காக போருடும் காலத்தில் தணலிலே போட்டு தவிக்க விட்டாலும் தங்கக் தொட்டிலிலேப் போட்டு தாலாட்டுவதாகவேக் களிப்போம்.

**தின்:** இவைகளைக் கேட்டாவது புத்தி வருமா?

**கபூ:** அவமானம்-அவ்மானம் மலைபோன்ற அவமானம். நானாக இருந்தால் துப்புச்செடியில் தூக்குபோட்டுக்கொள்வேன்

**வ ம:** [உறுமிவிட்டு] இன்னொருமுறை இப்படி பேசாதே இறப் புலகத்திற்கு அனுப்பிவிடுவேன.

கபூ: அது உன்னால் முடியாது, என்ன நண்பா?

முக: ஆம் என்று கோடி-கோடி முறை சொன்னதாகவைத்துக் கொள் கபூர்.

வ ம: எத்தனைமுறை வேண்டுமானாலும் சொல்லிக் கொள்ளுங்கள். (ராணியைப் பார்த்து) நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள்? இன்பச்சுரங்கமான இல்லறத்தில் புகுந்து இனிய வாழ்வு நடாத்த இதயதாகம் கொண்ட நீங்கள் இறக்கக்கூடாது என்பதற்காகவே கடைசியாகக் கேட்கிறேன். சொல்லுங்கள்! மூண்டெழும் காதலின் முகவுரையாளர்கள், வாய்மையான இன்பத்தின் வரவேற்புத் தாள்கள் என்றெல்லாம் உங்களால் வர்ணிக்கப்படும் உங்கள் கண்களை குத்துவதற்குமுன் சொல்லுங்கள்.

கபூ; உமக்கென்ன பயுத்தியமா? உயிரே போனாலும் எழுதித் தர மறுப்பவர்கள் கண்களை குத்துகிறேன் என்றால் எழுதிக் கொடுப்பார்களா? அட அல்லா.

வ ம: அது எனக்குத் தெரியும், நீ சொல்லாதே.

கபூ: சொல்லாதே என்று சொல்லாதே, இனி நாங்களும் கேடு பேசும் உனக்கு சூடு கொடுப்போம்

வ ம: அப்படியா? போய்வந்து பார்க்கிறேன் உங்களை.

**[ஆரிய குருவின் அறைக்குப் போகிருன். - அங்கே]**

வ ம: எவ்வளவோ பயமுறுத்தி எழுதிக்கொடுக்கசொன்னேன், எள்ளளவும் பயப்படவில்லை. எரிந்து விழுகிருர்கள், என்னை எலிக்குஞ்சாக மதிக்கிருர்கள், எள்ளி, எள்ளி நகையாடுகிருர்கள், அவமானத்தின் கோடியில் தள்ளி அவஸ்த்தைப் படுத்துகிருர்கள்.

**கிட்:** நானும் ஒளிந்துகொண்டு பார்த்தேன். அவர்கள் கொடு, கொடு என்று கொடுத்த சூடிலே ஐயா முழி, முழி என்று முழித்துவிட்டார். எனக்கே ஐயோன்னு போச்சி.

**ஆரி:** சரி—சரி நீ சும்மா இரு நீங்கள் அச்சம்கொண்டு அலண்டு போகாதீர். ஆரம்பித்துவிட்டோம் இனி அயரக்கூடாது. அமர்களத்தில் குதித்துவிட்டபிறகு அஞ்சுவது பேதமை நான் என்ன அறிவற்றவனு உம்மை ஆபத்து வழியில் அனுப்பிவிட.

**வ ம:** அப்படியானல் ஆபத்துப்பாதை உங்களுக்கு அதிர்ஷ்டப் பாதையாகத் தெரிகிறதா?

**ஆரி:** அப்படி ஒன்றுமில்லை. தப்ப வழி தருகிறேன் கேளுங்கள். (இரகசியமாக சொல்லுகிருன்) ஆனல் ஒன்று—போட்டியைப் பார்த்துவிட்டு போகும்படி மட்டும் இருக்கச் செய்யுங்கள், பிறகு நடப்பதைப் பாருங்கள்.

**வ ம:** ஆ ஹா! அருமையான வழிச் சொன்னீர். இல்லம் பற்றி எரியும்போது இன்பமழை பெய்ததுபோல் ஆயிற்று நீங்கள் இயம்பிய வழி. போய் அப்படியே செய்கிறேன்.

(போய்விடுகிருன்)

**சொ:** அப்பா! போட்டி என்றீர்களே அந்தப் போட்டியில் வெற்றி பெருபவர்களுக்கு பரிசுவழங்க என்னை நியமியுங்கள். சேரன் சிற்றரசன் முல்லைக் கொடியாள்களைக் கண்டதும் பல்லைக் காட்டுவான். அவனை நம் வலைக்குள் வரவழைத்து அவர்களுக்குள்ளேயே விரோதத்தை உதயமாக்குகிறேன்.

**ஆரி:** முகலாயனும் உடன் இருப்பவனே, அவன் உன்னைகண்டு பிடித்து விடுதானே.

**சொ:** கண்டுபிடிக்கும்சக்தியை அவன் கண்களிலிருந்து எடுத்து விடுகிறேன், கண்வைத்த இடத்தில் கன்னி போடாமல் விடுவதில்லை என்பதை கட்டாயம் புலப்படுத்துகிறேன்.

**கிட்:** இது நடக்கும் என்று நான் நம்பவில்லை.

**ஆரி:** நடக்காவிட்டால் போகிறது – நீ வாயையே திறக்காதே

கிட்: குருஜி; வர—வர நீங்க சர்வாதிகாரத்திலே போறீங்க நான் என் சிஷ்யன் பதவியை ராஜினாமா செய்கிறேன்.

(போகிருன்)

ஆரி: டே—டே—டே. [பின்னுல் போகிருன்]

## காட்சி:—17—1

**(ராணி முதலியவர்கள் கட்டப்பட்டிருக்கும் இடம்.)**

**வ ம:** ராணியாரே! அடமானம் போட்டதாக எழுதிக்கொடுக்க ஆகாது என்று சொன்னதில் மாற்றம்....

**ரா:** மாற்றம்! மாகடல் கலங்கினுலும் எங்கள் மனக்கடல் கலங்காது, மாருது.

**சேழி:** மானமே ஈடற்ற தனம்—அதைக் காத்து வளர்ந்ததே எங்கள் இனம். அடமானம் போட்டதாக எழுதிக் கொடுத்து அவமானத்தைச் சுமக்கமாட்டோம்

**வ ம:** வரவேற்கிறேன் உங்கள் வீரத்தை, வாழ்த்துகிறேன் உங்கள் தீரத்தை, வானளாவப் போற்றுகிறேன், மானத்திற்காக நீங்கள் செய்யும் தியாகத்தை. வீரத்தின் திலகங்களே! விவேகத்தின் திருமணிகளே! நீங்கள் வீரத்தையும், விவேகத்தையுமே தாய் தந்தையாகக் கொண்டு வளர்க்கப்பட்டவர்கள் என்று கேள்விபட்டேன். அதை நேரில் பார்க்கவே உங்களை கட்டுவதுபோல் கட்டி, சோதனை புரிந்தேன். தவருனல் மன்னிக்கவும், வீரர்களே! எல்லோரையும் அவிழ்த்து விடுங்கள்.

**(அவிழ்த்து விடுகின்றனர். பிறகு)**

**வ ம:** உங்களுக்காகவே வீரப்போட்டி ஒன்றிற்கு ஏற்பாடு செய்திருக்கிறேன், பார்த்துவிட்டுப் போகுமாறு கோருகிறேன்,

**ரா:** வீரப்போட்டியா....? பார்த்துவிட்டே போகிறோம.

**முக:** நீங்கள் பார்த்துவிட்டு வாருங்கள் நான் போகிறேன்.

**சேழி:** நீங்களும் பார்த்துவிட்டு....

**முக.** இல்லே. நாங்கள் மிக்க அவசரமாக போயாகவேண்டும்,

**சேழி:** நல்லது

## காட்சி:-18

இடம்:— வடநாட்டு அரண்மனே, கோட்டை வெளி.

**(வீரப்போட்டி.)**

(சொர்ணு, பார்த்த கண்கள் தன்மீதே மொய்க்கும்படியான அளவுக்கு அலங்காரம் செய்து கொண்டு வருகிருள், சேரன் கண்கள் அந்த அலங்காரத்திலிருந்து, அழகு உருவத்திலிருந்து போதையை எடுத்துக் கொள்கின்றன. அவளேயே முறைத்துப் பார்க்கின்றன். அதையே எதிர்ப்பார்த்து வந்த சொர்ணு புன்னகையை அவனுக்கு தூது அனுப்பிய வண்ணம், பரிசு வழங்குவோர்க்கென அமைந்த ஆசனத்தில் அமருகிருள்.)

**சொ:** போட்டி ஆரம்பமாகட்டும்.

**[இரண்டு வீரர்கள் போட்டி போடுகின்றனர் கத்தியின் மூலம்]**

**(முடிந்ததும்.)**

சோ: இப்போது போட்டியிட்டு ஜயித்தவரிடம் வேறு யாராவது போட்டியிடுகிறீர்களா?

சேழி: நான் இடுகிறேன்.

(போட்டி நடைபெறுகின்றது. சேழியன் வெற்றி பெறுகிருன்)

சோர்: (சேரனைப் பார்த்தவண்ணம்) இப்போது வெற்றி முரசு கொட்டியவரிடம் போட்டி செய்ய யாருவது முன் வருகிறீர்களா? யாருமில்லையா? (சேரனைப்பார்த்து, நீ செய் என்ற அர்த்தம் தொனிக்குமாறு தலையை அசைக்கிருள், சேரன் மயங்குகிருன்.) எல்லோரும் கோழைகளா?

சேழி: முன் வரவில்லை என்ருல் கோழைகள் என்றுதானே அர்த்தம்.

சேர: என்னையும் சேர்த்தா கோழை என்று சொல்லிவிட்டாய்? நானே நிற்கிறேன்.

மல்: அன்பரே!

சேர: மல்லிகா! தடைபோடாமல் விடைகொடு எடை போடுகிறேன்.

மல்: வேண்டாம்

சேர: வெட்டிப்பேசாதே. இத்தனை நாட்கள் உன் பேச்சு தேவ வாக்கு—அதுவே என் போக்கு. இன்று முடியாது.

மல்: மன்ருடிக் கேட்கிறேன்.

சே: மறுமுறையும் சொல்லுகிறேன். நீ அணைபோடுவதை நான் வினையாகவும் கருதவில்லை—துணையாகவும் கருதவில்லை. ஏன், உன் ஆசி—எனக்கு வெறும் தூசி—பேசி பயனில்லை.

ர: சேரரே!

**சேர:** மடைபோடாமல் இருப்பதே மரியாதையைக் காற்றுக் கொள்ள வழி.

**மல்:** அன்பரே!

**சேர:** மல்லிகா! நான் வெற்றி பெற்ருல் நீ போற்றியும் அழைக்காதே, தோற்ருல் தேற்றியும் அழைக்காதே. போ. [சேழியன் அருகில் சென்று] நிற்கத் தயார்தானே?

**சேழி:** நாமிருவருமா? நன்ருயிருக்கிறதா?

**சேர:** கேள்வி வேண்டாம். எடு வாளை. வாள் வீச்சு – உனக்கு வழக்கமாச்சு என்ருல், உன் கம்பீரக்காட்சி—கற்ற வித்தைக்கு சாட்சியாளுல்—எடு.

**(சேழியன் வேண்டாம் என்பதற்கு அறிகுறியாக தலையை ஆட்டுகிருன்.)**

**சேர:** அச்சம் கொண்டு ஆகாது என்பதைக் காட்டிலும், அடி பணிந்து விடலாம்.

**சேழி:** அடிபணிவதா? நான் உனக்கு அடிபணிவதா? எடுவாளை! உதமகண்டலமான என் உள்ளத்தை உஷ்ண மண்டலமாக்கிவிட்டாய், எடும்!!

**சோ:** உங்கள் போட்டி கம்பில் நடக்கட்டும்.

(கம்பு கொண்டே போட்டியிடுகின்றனர். சேரன் தோல்வி காண்கிருன். அவமானத்தால் கம்பை வீசி எறிந்துவிட்டு வேகமாக நடக்கின்ருன் அந்த இடத்தை விட்டு. மல்லிகா "நில்லுங்கள், நில்லுங்கள்" என்கிருள் நிற்கவில்லை அவன்—எனவே பின் தொடருகிருள் மல்லிகாவும்.)

**ரா:** (சேழியனிடம்) என்னங்க?

சேழி: என்னை என்ன செய்யச் சொல்லுகிறீர்.

ரா; ஒன்றுமில்லை. முகலாயரிடம் சென்று, அவரை சேரரை சமாதானப்படுத்த அனுப்புவோம் வாருங்கள்.

காட்சி:-19

இடம்:— சேரன் அரண்மனை, (சேரன், மல்லிகா)

மல்: வெற்றி தோல்வி சகஜம் அதற்காக வேதனைப்படலாமா? அதிலும் எவரும் போட்டியிட பயந்த ஒரு மாவீரர் இடத்தில் தானே தோற்றீர்கள், அன்பரே! உங்கள் சிரிப்பற்ற முகம் எனக்கு சித்திரவதைக்களம், உங்கள் களிப்பு நிலை எனக்கு கண்காட்சி சாலை, கவரும் பூஞ்சோலை என்பதை எல்லாம் மறந்து விட்டீரா? நீங்கள் அகம் நோவது நான் அக்கினியில் சாவது போலிருக்கிறதே

சேர: மல்லிகா! புகையும் மனதில் பூரிப்பு மலருது. அக்கினி மலை மீது ஆட நினைக்காதே.

மல்: கண்ணாளரே! உங்கள் கனியிதழ் புன்னகைதான் நான் கண்டெடுக்கும் புதை பொருள். உங்கள் அமைதியான வாழ்வுதான் எனக்கு அமர வாழ்வு.

சேர: மல்லிகா! நிம்மதியில்லா மனம் — நிலவில்லா வானம் இருட்டுக் கண்டமான என் இருதயம் இன்பக்கைலாயமாக அவன் இருக்கும் வரை மாறுது

மல்: அவர் அழியவேண்டுமென்கிறீரே அவர் என்னசெய்தார்?

சேர: அது எனக்குத்தான் தெரியும், இனி அவனை அடக்க முயல்வதே என் அன்றாட பூசை. என் அவனை அழிக்கும் திட்டங்களிலேயே இனி அயராத யாத்திரை செய்யப் போகிறேன்.

மல்: ஆ! இது என்ன முரட்டுத்தனமான முடிவு! இந்த சரியற்ற முடிவு என் சகோதரியின் விரோதத்தை சரமாறியாக சாகுபடி செய்யும் என்பதை சற்று நினைத்துப் பாருங்கள்.

**(கவனித்துக்கொண்டே முகலாயனும், கபூரும் வருகின்றனர்)**

முக: இப்போதே, உங்களிடத்தில் இருக்கிறது ஏதோ ஓர் குரோதம்–அதனால்தான் சேழியரிடத்தில் கொள்ளுகிறீர் இந்த வீணான விரோதம் என்று சிலர் பேசுகிறார்கள். இந்த இழிவான பழிக்கு நீங்கள் இடந்தரலாகாது.

கபூ: உங்களுக்குள் பிளவு என்றால் வடநாட்டானுக்கு தினவு கூட ஏற்படும். உங்களுக்கிருக்கும் செல்வாக்கு கூட செத்துவிடும் உங்களைக்கண்டு மாற்றார் ஒடுங்குகிறார்களே அது உங்கள் ஒற்றுமையால் தான்.

சேர: வேண்டாம் போதனை. என்றைக்கிருந்தாலும் ஒரு நாள் கண்களைத் தாக்கும் கடும் மின்னலைப் போல், காதுகளை தாக்கும் கனத்த இடியைப்போல் அவனை கட்டாயம் தாக்கத்தான் போகிறேன்–அவன் கட்டைக்கு நீடூழி ஒய்வை வழங்கத்தான் போகிறேன். அவன் கண்களுக்கு சிரஞ்சீவித் தூக்கத்தை தரத்தான் போகிறேன்.

மல்: வேண்டாம் இந்த உங்கள் போக்கால் இருதலைக் கொள்ளி எறும்பாகப்போகும் என்னை நினைத்துப் பாருங்கள்.

சேர: அக்கறையில்லை; அவனைப் பொருத்த வரையிலும ஒன்று முதல் எனக்கு வினையே விளையாட்டு, கொடுமையே கொலு மண்டபம், வஞ்சகமே வரலாறு,

மல்: என்னைப்பற்றியா உங்களுக்கு அக்கறையில்லை. இப்புவியிலே உன் புன்னகைதான் எனக்கு உயர்ந்த பொருள்–அதனால்தான் அகன்றுவிடுகிறது என் நெஞ்சிலே உள்ள

இருள்—தயவு செய்து அதை அருள் என்றெல்லாம் சொன்ன நீங்களா இப்படிச் சொல்வது?

**கபூ:** நண்பா; என்னை இப்படி எல்லாம் கேட்க ஒரு ஆளிருந்து உயிரை விடு என்றால் விட்டுவிடுவேன்.

**முக:** ஒரு ஆள் என்றால் ஆணா, பெண்ணா கபூர்?

**கபூ:** பெண்தான் நண்பா. நீ வா போவோம். இவர்தான் சனியனை சம்பாதிக்க சத்தியாகிரகம் செய்கிறாரே!
(போய்விடுகின்றனர்)

**மல்:** அன்பரே! பூரிப்புதரும் பூஞ்சோலையாகவும், கடும்பய மூட்டும் காடாகவும் மாறும் வாழ்க்கையில், சூதும், வாதும் எதற்கு? நீங்கள் போகும் இந்தப் பாதையில் இரண்டு நாடுகளும் இடுகாடாகிவிடுமே.

**சேர:** ஆகட்டும். (போய்விடுகிறான்)

**மல்:** ஐயோ முகலாயர்கூட போய்விட்டிருக்கிறாரே. இவர் பேசியதை எல்லாம் அக்காவிடம் போய் சொல்லிவிட்டால்.... அவளோ கோபக்காரி, ஆவென்று கர்ஜிப்பாளே, அப்படியாவென்று துள்ளுவாளே, என்ன செய்வேன்...? செய்வதென்ன? இவர் சமாதானமாய் விட்டார், என்று அக்காவிடம் சொல்லும்படி சொல்லவேண்டும். பிறகு இவரை சமாதானப்படுத்த வேண்டும், வேறுவழியில்லை.

**காட்சி:—20**

இடம்:—பாண்டிய நாட்டு அரண்மனை.

**ரா:** முகலாயரே! சேரனை சமாதானப் படுத்தினீர்களா?

**முக:** எங்கள் சமாதானப்பேச்சு அவருக்கு ஏறவில்லை. ஆறுதல் மழை பொழிந்தோம், ஆத்திரத்தீ அணையவில்லை,

**சேழி:** என்ன சொல்லுகிறார்?

**கபூ:** என்ன சொல்லுகிறார்...? உங்களை தள்ளுவதற்காக தவமே செய்வேன் என்கிறார், அங்கே மல்லிகாம்மா கண்ணீர் விட்டதை பார்த்து என் மனமே கலங்கி விட்டது,

(கண்களை துடைத்துக்கொள்ளுகிறான்)

**ரா:** அயோக்கியன் அப்படியா சொன்னான்? இவருக்கு குழி தோண்டுவதிலா குறிவைத்திருக்கிறான். பார்க்கிறேன்.

**சேழி:** அவர்தான் ஆத்திரத்தில் பேசியிருக்கிறார் என்றால், நீரும் அதே தன்மையில் பேசுகிறீர். வெகுளி ஒரு வெப்ப நோய்—வேண்டாம்.

**கபூ:** நீங்க என்னங்க. அங்கே மல்லிகாம்மா எவ்வளவோ எடுத்துச் சொன்னாலும், நீபேசாதே; அவனைப்பொருத்த வரையிலும் இனி எனக்கு எனக்கு . என்னமோ சொன்னார் இந்தப்பாழும் மண்டையில் அது நிற்கவில்லை [தலைமேல் அடித்துக்கொள்ளுகிறான்] நண்பா! உனக்கு ஞாபகமிருந்தால் சொல்லும்படியாக அடியேன் கோருகிறேன்.

**முக:** அப்படியே ஆகட்டும். என்ன சொன்னார் என்றால்........ என்றால்... எனககுகூட ஞாபகமில்லை. ஹி—ஹீ இருக்கிறது, இருக்கிறது அதாவது உங்கள் அழிவுநாள்தான் அவருக்கு அதிர்ஷ்ட நாளாம். அவருக்கு குரோதம் பெரு வியாதியாய் போய்விட்டது. குணப்படுத்த அனுபவரீதியாய் முடியாது.

**சேழி:** இருக்கட்டும் நீங்கள் வாருங்கள்,

[போய்விடுகின்றனர் மூவரும்]

(போன கொஞ்ச நேரத்தில் மல்லிகா வருகிறாள்)

ரா: மல்லிகா! போட்டியில் அபஜயம் அடைந்ததைப் பற்றி உன் காதலர் என்ன சொல்லுகிறார்?

மல்: அவர் அதைப்பற்றி ஒன்றும் பேசவில்லை?

ரா; பொய் சொல்லுகிறாய்—அவன் முறட்டுப் போக்கிற்கு மூடு மந்திரம் போடுகிறாய், அவன் நன்றி கெட்டதன்மைக்கு நாணய முலாம் பூசுகிறாய்.

மல்: அக்கா; அவர் என்று சொல்லுவது போய் அவன் என்று சொல்லக்கூடிய தூரம் ஆத்திரத்தால் போய்விட்டாய், இனிமேல் போகாதே.

ரா: போவேன்! அவனை கடிக்க வந்த கர்மம் என்றுகூட கழறுவேன்.

மல்: அக்கா! அளவுக்கு மீறி பேசுகிறாய்; அவரை அவதூறாகப் பேசுவதை நான் அழுத்தமாகக் கண்டிக்கிறேன், கண்டபடி ஏசுவதை கனமாக ஆட்சேபிக்கிறேன்.

ரா: அதற்காக குள்ளநரி அவனை குழந்தை மனங்கொண்டவன் என்று கூறமாட்டேன். அவன் உத்தமனல்ல! ஊதாரி. நன்றியை மறக்கும் நச்சுப்பூச்சி.

மல்: அக்கா! மீண்டும் சொல்லுகிறேன் என் காதலர் சதிராடும் சண்டாளர்தான்; அவர்சகவாசமே சனியனின் தொடர்புதான். என்றாலும் இதை என் எதிரிலேயே சொன்னால்.?

ரா: கண்டிப்பதை விட்டு கத்தியையே எடுத்துக்கொள்வாய்....?

மல்: கட்டாயம்.

ரா: இப்போதே எடு பார்ப்போம்.

(இருவரும் சுவற்றில் மாட்டப்பட்டிருந்த கத்திகளை உருவிக்கொண்டு சண்டை போடுகின்றனர். மல்லிகாவுக்கு சிறிது காயம் பட்டு, ரத்தம் வருகிறது. அதைக் கண்டு, ராணி பொறுக்க முடியாமல் மல்லிகா என்று சேர்த்து அணைத்துக் கொள்ளுகிருள். மல்லிகாவும் அக்கா என்று தழுவிக் கொள்ளுகிருள்.)

## காட்சி:—21

இடம்:— வடநாட்டு அரண்மனை
(வடமன்னன், ஆரியகுரு, கிட்டு, சொர்ணு.)

**வ ம:** சொர்ணு; கண்கொட்டி சேரன் கருத்தைத் தட்டிக் கொண்டாய். உன் கண்ணடிப்பை அவன் காதல் துடிப்பாக எண்ணியிருப்பான். அவனுக்குத் தெரியுமா உன் கட்டிலறை தனக்கு கல்லறை என்பது; இன்னும் சொன்ஞல் உன் மோகனப் புன்னகை கிடைத்ததை மோட்சம் கிடைத்ததாகவேக் கருதியிருப்பான்.

**கிட்:** அப்ப! அம்மாவேக் கிடைத்து விட்டால் என்ன கிடைத்த தாகக் கருதுவான்?

**வ ம:** மண்ணுங்கட்டி கிடைத்ததாகக் கருதுவான்.

**கிட்:** அப்ப; நம் சொர்ணும்மா மண்ணுங்கட்டி... இன்ஞ மண்ணுங்கட்டி.

**ஆரி:** மண்ணுங்கட்டியல்ல சங்கக்கட்டி. சொர்ணு! எனக்கொரு யோசனை கேள் அதை—நீ இப்பொழுதே சேரன் அரண்மனைக்கு செல்லவேண்டும். சென்று; சேரனும், சேழியனும் ஒருவருக்கொருவர் அடித்துக்கொண்டு சாகக்கூடிய அளவுக்கு சேரன் கருத்தை பிடித்துத் தள்ள வேண்டும். தாக்கிக் கொண்டு மாளக்கூடிய நிலையில் சேரன் மனதை தூக்கிப் போடவேண்டும். அப்போதுதான் அவர்கள் விரோதம் கொள்ள நீ ஆரம்ப பூஜை போட்டாயே அதில் அர்த்தமிருக்கிறது. அது மட்டுமா? அப்போதுதான் வீழ்ந்துவிடும் அவர்களுடைய

சிரசு—நமக்கு கிட்டிவிடும் அரசு—கொட்டுவோம் வெற்றி முரசு.

**கிட்:** குருஜி! சாவு நமக்கும் நம் சாம்ராஜ்ஜியம் அவர்களுக்கும் கிடைத்து விட்டால் என்ன செய்வது?

**ஆரி:** சட்டி செய்வது.

**கிட்:** வேண்டாம்—வேண்டாம், அஃதவிட கொஞ்சம் மேலான தொழிலாக பாருங்க. நீங்க சட்டி செய்வதைப் பார்த்து நான் எப்படி சகிப்பேன்.

**வ ம:** சரியான பைத்தியம் நீ சொர்ணு! சேரன் எந்த சமயத்திலும் நீ தள்ளவந்த தரித்திரம், சாய்க்க வந்த சனியன், வம்சத்தை அழிக்கத் தோன்றிய வால் நட்சத்திரம் என்பதை தெரிந்துக் கொள்ளக்கூடாது.

**கிட்:** தெரிந்து கொண்டால் சுண்ணும்பு க்கால்வாயில் போட்டு சுட்டு விடுவான்,

**சொ:** தெரியும், இப்போது என்னுடன் சேரன் அரண்மனைக்கு யார் வருவது?

**ஆரி:** யார் போவது?

**வ ம:** எல்லோருமே போவோம்.

காட்சி:-22

இடம்:—சேரன் அரண்மனை.

(சொர்ணு, வட மன்னன், கிட்டு, ஆரியகுரு.)

**வ ம:** சொர்ணு! சொன்னதெல்லாம் நினைவிருக்கட்டும். கருத்திலே உள்ள சூழ்ச்சியை மறைக்க கண்ணிலே ஒரு கவர்ச்சி. உள்ளத்திலே இருக்கும பூகம்பத்தை ஒளிக்க உதட்டிலே ஒரு புன்னகை. நடத்தையிலே சூறுவளி

என்பதைக் காட்டாமலிருக்க நாவிலே தென்றல் பேச்சு. போதும்—சுய அறிவு மாண்டு போகும்—சுருண்டு கிடப் பான் மடியில்—சுட்டிக்காட்டிய பாதையில் ஓட்டமாய் ஓடுவான்.

கிட்: இதில் தவர் ஏற்பட்டால்—நீ அரசாட்சியைப் பிடிக்க வந்த பிசாட்சி, உனக்கு கிடையவே கிடையாது மனசாட்சி என்பதை தெரிந்துகொண்டால், கரும்புள்ளி, செம்புள்ளி குத்தி, கழுதைமேல் ஏற்றி. கண்டோர் காரிதுப்ப பவனி பவனி கொண்டு வருவான்,

சோ: என் பாதத்தையே பரலோகமாக, கண்பார்வையையே கடவுள் கடாட்சமாகக் கருதச் செய்கிறேன் பார். என்னை என்னவென்று நினைத்துக்கொண்டாய்.

வ ம: கிட்டு; முத்து. முத்தா வார்த்தைகளை எப்படி கொட்டு கிருய்?

ஆரி; என்னங்க அப்படி கேட்கிறீர்கள்! கிட்டு, என்னுடன் சேர்ந்து சாஸ்த்திரமெல்லாம் படிக்கிருன்.

வ ம: என்னென்ன சாஸ்த்திரம் படித்திருக்கிருய்?

கிட்: நான்தானே கொக்கோக சாஸ்த்திரந்தான் படித்திருக் கிறேன். அதில் ஆண், பெண் கூடுதலைப்பற்றி எழுதி யிருக்கிருன் பார். அட! அட!! சொல்ல முடியாது. ஒரு நாளைக்கு அதையே என் குருஜி பத்துமுறை படிக்கிருர்.

[சேரன் வந்து]

சேர: நீங்களா! உங்கள் விஜயம் எனக்கு களிப்பின் உதயம்-உங் கள் வரவு எனக்கு சந்தோஷத்தின் உறவு. வாருங்கள்.

## காட்சி:-23.

இடம்:— பாண்டிய நாட்டு அரண்மனை (தின்னத்தூங்கி, கபூர்.)

தின்: கபூர்; இது என்ன?
கபூ: குட்டு.
தின்: இது?
கபூ: குத்து.
தின்; இது?

கபூ: ஏய்! நிறுத்தப்பா; இது—இதுன்னு கேட்கிற சாக்கிலேயே அடிக்கிறியே. சரியான ஆள்—சரியான ஆள்.
தின்: இது போகட்டும் கபூர்! நன்ருக நடிக்கிருயாமே, ஏதாவது ஒரு கட்டத்தை நடி பார்ப்போம்.

கபூ: நீயே நடி;

தின்: சரி; பெண்ணே; நீ பச்சைப் பொன்வண்டு—உன் சொற்களோ அசல் கற்கண்டு உன் தீங்கிகர் உடம்பு-தித்திக்கும் கரும்பு. உன் பற்கள்—சொல்வதற்கு சொற்களே இல்லை.

கபூ: இது நன்ருக இல்லை.

தின்: நன்ருகயில்லையா? சரி கண்ணே; என் அகத்திலே அன்பால் அரசாட்சி நடத்தும்·ஆரணங்கே; என்னை அடிக்கடி வந்து என் சந்திப்பதில்லை. நீ இல்லையானல் எனக்கு முழுமதி காயும் நேரமும், மூடுபனி பெய்யும் நேரமாத் இருக்கிறதே; பூந்தோட்டமும் எனக்கு புழுதி மேடாகக தோன்றுகிறதே; நான் என்ன செய்வேன், என்ன செய்வேன் (பாடி ஒவென்று அழுகிருன்.)
கபூ: ஏய்—ஏய் இன்னு அழறே. அழாதே அழாதே. இப்படித் தான் நடிப்பதா? நடித்தால் தத்ரூபமாக நடிக்கவேண்டாமா—தத்ரூபமாக.
தின்: தத்ரூபமாக நடிக்கட்டுமா? சரி; அட சண்டாளா பார்! வர்மம் கொண்டு தர்மம் தவறும் வீணனே பார்! உன் விஷ விளையாட்டிற்கு என் வாழ்வையே மைதானமாக்கிக் கொண்ட ராட்சசனே பார் என்னை பார்.

[கபூரை அடிக்கிருன்]

கபூ: என்னப்பா அடிக்கறே
தின்: அடிக்கிறேனு? தத்ரூபமாக நடிக்கிறேம்பா—நடிக்கறே,
கபூ: நீ நடித்தது போதும்பா போதும். நீ வா சபாமண்டபத் திற்கு. (போகின்றனர். அங்கே மல்லிகா, சேழியன், முகலாயன் இருக்கின்றனர்.)
மல்: சேழியரே; என் அக்காவைத் திருமணம் செய்துக்கொள் ளப் போகிறீரே, இல்லாளேப் பற்றி உமக்கு என்ன தெரியும்?
சேழி: இல்லாள் இன்பத்திற்கு கிடைத்த சரசியல்ல—இல்லத் தை ஆளக்கிடைத்த அரசி. அடிமை சாசனம் எழுதிக் கொடுத்தவள் அல்ல—அன்பு சாசனம் எழுதிக் கொடுத் தவள்.
மல்: அன்பு என்கிறீரே—அன்பு என்ருல்?
சேழி: அன்பு—அள்ள அள்ளக் குறையாத பண்பு வாய்ந்தது.
முக: நேரமாகவில்லே? திருமண அழைப்பைத்தர இன்னும் பல நாடுகள் போகவேண்டியிருககிறதே, புறப்படுங்கள்.
தின்: ஊம் புறப்படுங்க, புறப்படுங்க.

## காட்சி:—24

இடம்:—சேரன் அரண்மனே. (சேரன். சொர்ணு.)

சொ: இளவேனிற்காலம் இதயங்காட்டி என்னே இங்கே இழுத்து விட்டீர்கள்.
சேர: நீ மட்டும் என்னவாம். சொர்ணு! உன் காந்தக் கருவிழி கள் காதல் மந்திரம் போடுகிறது. ரசம் ஊறும் அதரங் கள்; விஷம்போல் உணர்ச்சியை ஏற்றுகிறது. புஷ்ப ராசிகளுக்கே புதுமையாகத்தோன்றும் உன் புன்னகை. வர்ணஜாலம் செய்யும் வானவில்லுக்கே விந்தையாகத் தோன்றும் உன் வதனம்.

**(கிட்டு ஓடிவந்து)**

கிட்: பாண்டிய நாட்டிலிருந்து யார் யாரோ வருகிருர்கள்,

சேர: அப்படியா! நீ உன் அறைக்குப்போ. கிட்டு நீயும் போ.

(சேழியன், மல்லிகா, முகலாயன், கபூர், தின்னத்தூங்கி வருகின்றனர்)

**சேர:** வாருங்கள்—வாருங்கள்; வரம் கிடைத்ததாகவேக் கருது கிறேன் உங்கள் வரவு கிடைத்ததை. சேழியரே அன்றைய என் நடப்பு—அறிவீனத்தின் படைப்பு. மன்னிக்குமாறு மன்றாடிக் கேட்கிறேன்.

**சேழி:** நல்லது சேரரே

**மல்:** என் அக்காவுக்கும் இவருக்கும் திருமணம் அடுத்த எட்டாம் நாள். அதற்கு உங்களை அழைத்துப் போகவே வந்தோம்.

**சேர:** சந்தோஷம் சேழியரே! உங்கள் மணச் செய்தி எனக்கு மட்டில்லா மகிழ்ச்சியைத் தருகின்றது,

**சேழி:** தாங்கள் இப்போதே வரவேண்டும்

**சேர:** நான் திருமணத்திற்காக பலவற்றை தயார்படுத்த வேண்டியதாய் இருப்பதால் இரண்டு நாட்கள் கழித்து கட்டாயம் வருகிறேன்.

**மல்:** அப்படியானால் நாங்கள் போய்வருகிறோம் இன்னும் சில நாடுகளுக்குப் போக வேண்டும்.

**சேர:** செய்யுங்கள்.

(போய்விடுகின்றனர் சொர்ணுவும், கிட்டுவும் வருகின்றனர்)

**சேர:** கல்யாணம்.

**சொ:** உங்களுககுத்தானே?

**சேர:** நீ ஒன்று; திருமணம் எனக்கல்ல. திருமதி ராணிக்கும் சேழியனுக்கும். சொர்ணு; அவன் கல்யாண நாளை அவனுக்கு கருமாந்திர நாளாக்கவேண்டும். அவன் விவாகமென்று சிரிப்பது என்னை விஷமிட்டு மரிப்பது போல் இருக்கிறது.

**கிட்.** நீங்க சொல்வதைப் பார்த்தா கவலைத்தீ படர்ந்துள்ள உங்கள் மனதில் களிப்புமழைபெய்ய அவனைகாவு கொடுக்கவேண்டும் போலிருக்கு ...

சேர: கொடுக்க வேண்டும்போல் என்ன கொடுத்தாக வேண்டும் என்றும சொல். சொல்லுடா.
கிட்: சரிதாங்கோ. சரிதாங்கோ. சொன்னமாதிரி வச்சிகுங்கோ.

(ஆரியகுரு வந்து)

ஆரி: என்ன ?

சோ: ராணிக்கும், சேழியனுக்கும் திருமணமாம், அந்தத் திருமணம் நடக்கக்கூடாது என்பது இவருடைய கருத்து.
சேர: கருத்தல்ல; கங்கணம். விழைவு அல்ல; விரதம். அந்தத் திருமணம் முடிந்தது என்ருல் நம் வாழ்வுஒடிந்தது என்று அர்த்தம், ஆசைக்கோட்டை இடிந்தது என்று பொருள்.
கிட்: அதுமட்டுமா நீங்க சோத்தால் அடித்த பிண்டம் சொன்ஞல் கோவிச்சுகுவீங்க, வேண்டாம், குருஜி; சேழியனுக்கு திருமணம் செய்வது இவர் கையில் திருவோட்டைக் கொடுத்து கோவிந்தா – கோவிந்தா போடச் சொல்லுகிறமாதிரி இருக்கலாம். நீங்கள்தான் தந்திரப் பள்ளிக்கூடத்திற்கு தலைமை உபாத்தியாயராச்சே, திருமணத்தைத் தடுக்க ஒருவழி சொல்லுங்கள். இது உங்களுக்கு நான் செய்யும் சிபார்சு.
சேர: போடா நாயே.
கிட்: இன்னுங்க நன்றி செலுத்தாம நாயின்னு சொல்றீங்க.
ஆரி: அந்தத் திருமணத்தை நிறுத்தவேண்டும்—உங்கள் மனதிலே இன்பத்தைப் புகுத்தவேண்டும் அவ்வளவுதானே செய்கிறேன் ஒரே பிணம்—நின்றுவிடும் அந்த மணம்.
சேர: புரியவில்லையே நீங்கள் புகலுவது?
ஆரி: [இரகசியமாகச் சொல்லுகிருன்]
சேர: ஆ ஹா! ஆபத்தானக் கட்டத்திற்கேற்ற அருமையான திட்டம். வெந்துபோன வாயில் வெண்ணெய் போட்டீர், தணலாய் இருந்த என் மனதில் தண்ணீர் ஊற்றினீர், ஆம்! இதை செய்து முடிப்பது யார்?
ஆரி: நானே போகிறேன்—நானே செய்கிறேன் நலமே முடிக்கிறேன்.
சேர: இந்தக்குறி—தவறினுல் எனக்கு ஏறிவிடும் வெறி ஜாக்கிரதை.

காட்சி: 25

இடம்:- பாண்டிய நாட்டு அரண்மனை (மணப்பந்தல்) (குடிமக்களில் சிலர் மணமாகாத ஒரு வாலிபப் பெண்ணின் சவத்தைக்கொண்டு வந்து "மகாராணி" இந்தக்கோரத்தைப்பாருங்கள் என்றுகீழேவைக்கின்றனர். பாக்கிருள் ராணி. பதைக்கிறது உள்ளம்)

**ராணி:-** இந்த கோரத்தைச் செய்த கொடியவன் யார்? ........! என் தயக்கம்? இந்த அக்கிரமத்தைச் செய்த அரக்கன் யார்?

**குடி ஒ:** இந்தஅக்கிரமத்தைச் செய்தவர்கண்ணியத்தின் கழகம், உண்மையின் உறைவிடம் என்று தமிழகம் போற்றும் சேழியர்.

**ராணி:** தளபதியாரா?

**சேர:** மானுள்ளம் படைத்தவர் மீதா இந்த மாபெரும் பழி?

**குடி ஒ:** ஆம். அதற்கான ஆதாரம் இதோ.

(அஞ்சல் ஒன்று கொடுக்கிறான் ராணி மனதுக்குள்ளேயே படித்துவிட்டு) உருவத்திலே மன்மதன்! உள்ளத்திலே மாநாகன்! கண்ணிலேகைக்குழந்தை! கருத்திலே காண்டாமிருகம்.

**மல்:** என்னக்காக? என்ன எழுதியிருக்கிறது? என் இப்படிச் சொல்லுகிறாய்?

**ராணி:** எழுதியிருக்கிறது; காதல் கரையற்றது என்று, களங்கமற்றவர் போல் பேசி, காரியத்தை முடித்துக்கொண்டு கையை விரிக்கும் காமாந்தகாராக் குரங்கு இவர் என்று எழுதியிருக்கிறது; இதோ! இந்தப்பெண் இவருடைய காதலியாம்; இவர், மாசற்ற என் காதல், மழலைகள் கட்டும் மண்வீடல்ல மறையாத புகழுடப்பு என்று மயக்கு மொழி,பேசினாராம், நம்பினளாம்; இவர் மயக்குமொழி, மரணக்குழி என்பதையறியாமல் இச்சைக்கு இணங்கினளாம். இவரே! துரோகம்செய்து விட்டு என்னிடத்தில் யோக்கியரைப்போல் நடந்து என்னை திருமணம் செய்து கொள்ள ஏற்பாடு செய்ததினால் உலகம் கசந்து தற்கொலை புரிந்து கொண்டாளாம். காலையில் பூத்தகாதல்பூ

கதிரவன் உச்சிக்கு வருவதற்குள் கருகி விடவே விஷம் குடித்து செத்திருக்கிருள்.

**மல்:** இது உண்மையா? இந்தப்பெண்ணின் தற்கொலைக்கு நீங்கள் தாஞ காரணம்?

**சேழி:** மல்லிகா! நான்நிரபராதி. ஆனல் நிரூபிக்கவோ, நிச்சயப் படுத்தவோ இந்த நிலையில் வழியில்லை.

**மல்:** அக்கா! இத்தப் பெண்ணின் தற்கொலைக்கு இவர் காரணம் என்பதை என்னல் நம்பமுடியவில்லை; இவர் தறுதலையல்ல! தங்கக்கம்பி.இ ராட்சசனல்ல;இரட்சகன்.

**ராணி:** மாண்டு கிடக்கும் இவள் தீட்டியுள்ள மடலை மறந்து பேசுகிறுய். இவர் குற்றவாளி என்பதற்கு இதுவே தகுந்த—சாட்சி அசைக்கமுடியாத ஆதாரம். வீரனே! இவரைக்கைது செய்து சிறையிலிடு; நாளை விசாரணை!

(ராணி போகிறுள் படுக்கையறைக்கு. மல்லிகா, முகலாயன், தின்னத்தூங்கி, கபூர் பின்தொடர்ந்து போகின்றனர்)

**மல்:** அக்கா! தயவு செய்து தளபதியாரை விட்டு விடக்கா.

**ராணி:** முடியாது. காதகர்களுக்குக் கருணை காட்டி, கடமைக்கு ஒருகாப்பியமானப் பரம்பரையை களங்கப்படுத்த மாட்டேன் காலன்கணக்குத்தவறினலும், நான் கடமை தவற மாட்டேன். அறத்தைக் கொன்றுவிட்டு அரசாளுவதா? அறத்தை வளர்ப்பதே என் ஆயுள் இலட்சியம்.

**மல்:** என்னதான் இருந்தாலும் உன் காதலருக்கு நீயே தண்டனையளிப்பதா?

**ராணி:** காதலர் என்பதற்காக கடமை தவறுவதா? மணக்கப் போகிறவர் என்பதற்காக மனசாட்சியைக்கொன்று விடுவதா? வானவன் வழிதவறினலும் வண்டமிழ் நாட்டார் வாய்மை தவறமாட்டார் என்பது உனக்குத்தெரியாதா?

**முக:** எங்களுக்கு கூட தெரியும். ஆனலும் உங்கள் விடாப்பிடி உங்கள் வாழ்விற்கு ஒருபேரிடி, உங்கள் பிடிவாதம்-எங்களைக் செய்கிறது உயிர்வாதம்—விட்டுவிடுங்கள்.

**ராணி:** மாட்டேன்-தன்னலம் கொண்டு தர்மம் தவறமாட்டேன்! கடமை தெய்வத்திற்கு காதகம் செய்ய மாட்டேன்! நீதிக்காக நின்று போராடுவதே எங்கள் நீங்காத பண்பு.

## த. சந்திரன்

**தின்:** பண்பு! இருக்கட்டும் பின்பு முதலில் சேழியரை வெளியே விடுங்கள், நாட்டில் கிளர்ச்சிநடக்கும் போலிருக்கிறது.

**ராணி:** கிளர்ச்சி அதற்கு என் மகிழ்ச்சி மானிலமேஎதிர்த்தாலும் மனசாட்சிக்கு மாறுகநடேன். தாரணியோரின் பகையை விட தர்மத்தின் பகை பொல்லாதது, உலகை விரோதித்துக்கொள்வேன் ஆனல் உண்மையை விரோதித்துக் கொள்ளேன். பீதி கொண்டு நீதி தவறேன்.

**தின்:** அசுத்தமற்ற அன்பால் உங்களை அபிசேகம் செய்தவர் என்பதையாவது நினைத்துப்பாருங்கள்.

**ராணி:** அறம் அன்பிற்கு அப்பார்ப்பட்டது. நீதி இரக்கத்தின் விரோதி, தயை தர்மத்தின் பகை, எனவே மாருது என் மனம் மன்னியுங்கள். (அங்கிருந்து வெறியேறிவிடுகிருள் ராணி)

**கபூ:** இன்னும் கொஞ்ச நேரத்தில் நான் இறந்துவிடுவேன் போலிருக்கிறது என்ன நண்பா?

**முக:** ஆம். கபூர் நான் ஆம்என்று சொன்னதை வாபஸ் வாங்கிக் கொள்ளுகிறேன் ஏன் என்ருல் நீஇன்னும் கொஞ்ச நேரத்தில் இறந்துவிடுவாய் என்பது எனக்கு எப்படித் தெரியும்.

**மல்:** முகலாயரே! சேழியரை தப்பி ஓடும்படிச் செய்வதைத் தவிர வேறு வழியில்லை. வாருங்கள்.

(எல்லோரும் சிறைக்கூடம் போகின்றனர்)

**சேழி:** வாருங்கள்!

**மல்:** நீங்கள் தயவு செய்து அக்காவிடம் மன்னிப்பு கேட்டுக் கொள்ளுங்கள். எப்படியாவது மழுப்பி விடலாம்.

**சேழி:** மன்னிப்பு! மாசற்றவன் மரணத்திற்கஞ்சி மன்னிப்பு கேளான்.

**தின்:** சொல்வதைக்கேளுங்கள், தூக்கு மேடையிலிருந்து தப்புவதற்கு இது தான் வழி.

**சேழி:** தூக்குமேடை என்பதற்காக துவளமாட்டேன் தூய்மையினின்று துளியும் தவருத எனக்கு தூக்குமேடை தூக்கிச்செல்லும் பல்லக்கு சிறிதும் தவறறியாத எனக்கு சிரச்சேதம் சிறந்த வரப்பிரசாதம்.

**கபூ:** அங்கே அப்படி-இங்கே இப்படி யாருமே நடப்பதில்லை நம் சொற்படி, நண்பா! என்ன செய்வது?

**முக:** கபூர்! என் மூளையே கெட்டுவிட்டது வேலையேசெய்யாது

**மல்:** மன்னிப்பு கேட்காவிட்டாலும் மறைவாக தப்பியாவது போய் விடுங்கள்.

**சேழி:** பாழும் உயிர்கஞ்சி பதுங்கிவாழும் பேடியல்ல நான்.ஒரு நாளைக்கு ஒழியப்போகும் உயிரைக்காத்துக் கொள்ள ஓடி ஒளிய மாட்டான் தமிழன்.

**சுபூ:** தென்னவர் எதிலும் முன்னவர் என்பது எங்களுக்குத் தெரியும்இப்பொழுது எங்களுடன்வருகிறீரா இல்லையா? கை, கால்களைக் கட்டி தூக்கிக்கொண்டு போய் விடு வோம். ஆமா.

**தின்:** நீங்கள் சந்தோஷத்தோடு சாகிறீர் என்றே வைப்போம் அதனல் உங்கள் மீது உண்டான பழி-கழியுமா? கறை மறையுமா? சொன்னல்தான் விடுவேன்.

**சேழி:** அதற்காக மானமற்று ஓடுவதா?

**முக:** மானம், மானம். தலைசிறந்தது மானம் அதற்கு ஏற்படக் கூடாதுஊனம்,மறுக்க வில்லை என்றாலும் நீங்கள் குற்றம ற்றவர் என்பதை குவலயத்திற்கு தெரியப்படுத்தவேண் டாமா? அவற்காக நீங்கள் வாழ வேண்டாமா?

**சேழி:** (யோசித்து) வாழத்தான் வேண்டும்.

**கபூ:** சபாஷ். (முகலாயனை கட்டியணைத்துக் கொண்டு) இப் பொழுது தான் எனக்கு உயிர் வந்தது. என்ன நண்பா?

**முக:** இனிமேல் நான் ஆம் என்று சொல்ல மாட்டேன், அத ற்காக வருந்துகிறேன்.

**காட்சி 26**

இடம்:—சேரன் அரண்மனை (சேரன், ஆரியகுரு, கிட்டு, சொர்ணு)

**சேர:** தந்திரம் தக்கபலனைத்தந்துவிட்டது-கருதியபடியே காரியம் முடிந்தது-இவ்வளவும் உங்களால்—நீங்கள்தான் நான்காணும் கற்பனை கோட்டைகளைக்கட்டிமுடிக்கும் மேஸ்திரி. உண்மையாகவே உரைக்கிறேன் உங்கள் அறிவே அறிவு தான், இல்லையா கிட்டு?

**கிட்:** சொல்லவா வேண்டும், குருவுக்கு இன்ன அறிவு! இன்ன அறிவு!! மனிதனுக்கு இருக்கவேண்டிய அறிவா இருக்கு? கிடையாது தேவனுக்கு இருக்க வேண்டிய அறிவு.

(இப்பொழுது வீரன் ஒருவன் வந்து தளபதி சேழியர் சிறையினின்று தப்பி ஓடி விட்டதை தெரிவிக்கிருன்)

**சேர:** ஓடி விட்டானு? போச்சு மனக்கோட்டை மயானமாச்சு ஏதேதோ எண்ணினேன் எல்லாம் பிணமாச்சு! ஓடி ஒடித்து விட்டான் என் சந்தோஷத்தை, வெட்டி விட்டான் என் வெற்றிக்களிப்பை என் செய்வது? நம் சூழ்ச்சி எல்லாம் சுடுகாட்டைச் சேருகிறதே—அடிபட்டு அழிகிறதே.

**ஆரி:** என்மனம் குழம்புகிறது குட்டையென, பொறுத்து வருகிறேன்

**கிட்:** இந்த அவலநிலை உங்களுக்கு ஏற்பட்டதற்காக என் ஆழ்ந்த அனுதாபத்தை தெரிவித்துக்கொள்கிறேன்.

(சேரன் போடா என்று கிட்டுவை அடிக்கிருன்)

**சொர்.** எண்ணியபடியே எல்லாம் நடக்குமா? மேலும், ஓடி விட்டதளபதியைஒழிக்க முடியாதா? பயப்படாதீர்கள், அந்தப்பாவியை எப்படியும் அழிய வைக்கிறேன். பரவசப் பன்னீரை உங்கள் மீது தெளிக்கச் செய்கிறேன்.

(அருகில் சென்று சேரன் கன்னத்தை தூக்குகிருள், மல்லிகா பார்த்து கொண்டே வருகிருள்)

**மல்:** இதற்காகத்தான் சொல்லாமலேயே வந்தீர்களா?

**சேர:** யாரது?

**மல்:** நான் தான். காமநாடகத்தைக் கண்டு விட்டேனென்று கலங்காதீர், வெறிச் செயல் வெளிப்பட்டதே என்று வேதனைப்படாதீர்.

**சேர:** நான் வேதனைப்படவில்லை நீ வெளியேபோ.

**மல்:** நானு வெளியே போகட்டும்! நீங்கள் பண்பில் தங்கக் கம்பி என நம்பிவந்த நானு வெளியேபோகட்டும்!நீங்கள் குணத்தின் குன்று-உங்கள் காதல் மிக நன்று என எண்ணிய நானு வெளியே போகட்டும்! வெளுத்த காதலுக்கு நாம் வேதமாய்விடுவோம் எனக்கருதிய நானு வெளியே போகட்டும்!

**சேர:** நீதான்-பாண்டிய ராணியின் தங்கை மல்லிகா தான்.

**கிட்:** சிற்றரசர் சேரரின் மாஜி காதலிதான்.

**மல்:** என்ன சொன்னுய் (கிட்டுவை கன்னத்தில் அறைகிருள்)

**சேர:** மல்லிகா! தொடதே அவனை! போவெளியே. தேன் தித்திக்கிறது ஆனால் தெவிட்டாமலா இருக்கிறது.

**மல்:** என்ன! நீ தெவிட்டாத தென்றல், சப்பிட்டுப்போகாத சந்திரவொளி என்று சொன்ன நீங்களா இப்படி சொல்லுகிறீர். வேண்டாம் இந்த வக்கிரம் இவளை நம்பி செய்யாதீர்கள் அக்கிரமம். இவள் உங்களை எமனிடம் சேர்க்க வந்த எழவு! பெண்ணுருவில் பெருந்தீ; இவள் பள்ளியறையே பலிபீடம்.

**சேர:** மூடுவாயை இவளைப்பற்றி பேசாதேஇறுமாப்பில் தோய்ந்தவார்த்தைகளை வீசாதே. இவள்கண்ணிலே இருக்கும் மோகனக்கலை....

மல்: கருத்திலே இருக்கும் மோசவலையைக் காட்டாமலிக் கிறது.

சேர: இல்லை. இவள் கண்ணிலே இருக்கும் மோக னக்கலை.... என் கருத்தை வலைபோட்டு இருக்கிறது. இவள் உதட்டிலே உருவாகும் நகை....?

மல்: உள்ளுக்குள்ளே இருக்கும் பகையை மறைக்கிறது.

சேர: இல்லி உதட்டிலே தோன்றும் நகை என் உள்ளத் தையே ஆசைக்குகை யாக்குகிறது.

மல்: இப்படிப்பேசி பாவத்தை விளைச்சல் செய்யாதீர்.

சேர: பாவமே எனக்கு இன்பத்தின் பாதை, போ நீ

மல்: பாதை-போதை கொண்டுள்ள உமக்கு அப்படிதானி ருக்கும், போகிறேன் (போய் விடுகிருள்)

கிட்: அம்மா தந்த அடி இன்னும் வலிக்கிறது (கன்னத்தை தடவுகிருன்)

சொ: போயும்—போயும் இவளைக் காதலித்தீர்களே பைங் கொடி ராணியைக்காதலித்து இருந்தாலும் அந்த நாட்டுபட்டம் கிடைக்குமே. அதிலும் அவள்அழகின் அவதாரம்; பூலோகத்து பூரண நிலா; அவள் உடல் வனப்புக் கடல்-அதற்குறிய போட்டயில் அவளுக்குத் தான் முதல் மெடல் இன்னும் கேளுங்கள் அவள் இயற்கை தொடுத்த மலர்மாலை இவள் இராட்சசன் தொடுத்த மாமிசமாலை.

சேர: என்ன சொல்லுகிருய்?

சொ: ஒன்றுமில்லை, ராணியைக்காதலித்து இருந்தாலும் அந்த நாட்டுகது ராஜா ஆகலாமே என்றேன்.

சேர: எனக்கும் இந்த எண்ணம் இருந்ததுண்டு, ஆனல் என் செய்வது? எண்ணையை நீர்மணந்து கொண்டாலும் என்னை அவள் மணந்து கொள்ளமாட்டாளே,

**ஆரி:** அப்படியானல் போரில்வென்ருவது அந்தப்பொற்கொடியாளை கைது செய்து கல்யாணம் செய்து கொள்ளுங்கள் இல்லையானல் உமக்கு நட்டம்-அந்த நாட்டு ராஜா பட்டம்.

**சேர:** நீங்கள் செப்புவது போல் செய்ய முடியுமா?

**ஆரி:** ஏன் முடியாது? தளபதி ஓடி இருக்கிற இந்த நேரத்தில் நம் எண்ணம் முற்று பெறுவது திண்ணம். சக்தி சிறிதென்ருலும் சந்தர்ப்பத்தில் பயன் படுத்திஞல் சரியான வெற்றி. சந்தர்ப்பம் ஒரு புயல், சாமர்த்தியமாகப் பயன்படுத்த வேண்டும். மேலும் வடநாட்டு மன்னரின் உதவியையும் வாங்கித்தருகிறேன்.

**சேர:** செய்யுங்கள் - பலாத்காரம் செய்தாவது ராணியை பணிய வைக்கிறேன்.

**கிட்:** பலாத்காரம் பலன் தராது.

**ஆரி:** தராதா? அறிவாளிபோல் பேசுகிருயே உனக்கு எவ்வளவு அறிவு இருக்கும்?

**கிட்:** சுமார் 8-மணங்கு இருக்கும். குருஜி அறிவுக்கு அளவே கிடையாது.

## காட்சி: 27

இடம்: முகலாயன் அரண்மனே (சேழியன், முகலாயன், தின்னத் தூங்கி, கபூர்)

**சேழி:** வாழ்க்கையே இராகு காலமாய் விட்டது.

**தின்:** பௌர்ணமி ஆகவேண்டும் என்கிறீர்களா?

**கபூ:** ஆ! அமாவாசை ஆகவேண்டும் என்கிருர். என்னங்க! நான் இந்த நாட்டு தளபதி பதவிக்கு தூண்டி போட்டிருக்கிறேன் அதனலே எனக்கு கொஞ்சம் கத்திச் சண்டை கற்றுக்கொடுங்கள்.

**சேழி:** இப்பொழுதா? நானா! முடியாது. தினனத்தூங்கி! நீ சொல்லிக்கொடு.

(இருவரும் கத்தியை எடுக்கின்றனர். கபூருக்கு கை நடுக்க மெடுக்கிறது, பயந்து பயந்து செய்கிறான்)

**முக:** கத்தியைப்பிடிக்கிறான் கைநடுங்குகிறது இவனுக்கு தளபதி பதவி வேண்டுமாம்.

**சேழி:** அவருக்குமட்டும்தளபதிபதவியைக்கொடுத்துவிட்டால்:

**தின்:** எதிரி சண்டையே போட மாட்டான் ஆனால் கோட்டைக்குள் வந்து விடுவான்.

(வீரன் ஒருவன் வருதல்)

**வீர:** சேரர் சிற்றசெனின் படைகள் பாண்டியநாட்டை நோக்கிப்போய் கொண்டிருக்கின்றன.

**சேழி:** அப்படியா! ராணிக்கே வஞ்சம் நினைக்க அவன் நெஞ்சம் துணிந்து விட்டதா? போகிறேன். வஞ்சம் நினைத்த அவனை தஞ்சம் காணச் செய்கிறேன். சுத்தம் சிறிதுமில்லா சித்தம் படைத்த அவன் ரத்தத்தை எடுத்து கோட்டையைச் சுற்றி பொலி இரைக்கிறேன்,

**முக:** போகிறீரா? ராணியின் வழக்கு மன்றம் உங்கள் வாழ்வைப் பிளக்க, பலி கொண்டு களிகொள்ள காத்திருப்பதை மறந்து விட்டீரா?

**சேழி:** இல்லை, ஆனாலும் போகிறேன். பெற்றநாட்டிற்கு ஆபத்து என்பதைக் கேட்டும் உட்கார்ந்து கொண்டிருக்க பேடியல்ல நான். என் தாயின் பொற் கரத்திற்கு விலங்கிட வந்த அந்தக் கொடியவனை, என் மாதாவின் அழகு முகத்திலே அவமானக்கரி பூச வந்த அந்தக் கயவனை, வெறி கொண்டு நெறி தவறும் அந்தப்பாதகனை வெட்டி வீழ்த்தப் போகிறேன். அவன் குடலை எடுத்து என் தாயின் கழுத்திற்கு மாலை சூட்டப் போ

கிறேன். என் தாய் நாட்டுச் சரித்திரத்தின் பெருமையை காக்கப் போகிறேன்.

[போகிறுன், தின்னத்தூங்கியும் பின்ருல் போகிருன்]

**கபூ:** தின்னத்தூங்கி! வரும் போது எனக்கு என்ன கொண்டு வருகிருய்?

**தின்:** நீ பந்தாடுவதற்கு எதிரிகளின் தலையைக் கொண்டு வருகிறேன.

**கபூ:** எதிரிகளின தலையையா? வேண்டாம்-வேண்டாம் தலையை தனியே பார்த்தால் எனக்கு மயக்கம் வந்து விடும்,

**முக:** கபூர், இனிமேல் நீதான் மந்திரி, உனக்கு அறிவிருக்கிறது

**கபூ:** எனக்கு அறிவிருக்கிறதா? எவ்வளவு இருக்கும்?

**முக:** எவ்வளவா? (கைகளை அகலமாகவிரித்து இவ்வளவு என்கிருன், பிறகு இவ்வளவு இருக்காது-இவ்வளவு-இவ்வளவு என்று குறைத்துக் கொண்டு வருகிருன்)

## காட்சி 28

இடம்:- பாண்டியராணியின் அரண்மனை [ராணி, மல்லிகா]

**ராணி:** மல்லிகா! சண்டைக்கு வந்திருப்பதோ உன் காதலன், நீ சகாயம் செய்யப்போவது எனக்கா? அல்லது அவனுக்கா?

**மல்:** யாருக்குமல்ல. என் மாதாவின் மாதாவாகிய இந்த மண்ணுக்கு-என்னை பாலூட்டி வளர்த்த இந்தப் பாண்டிய நாட்டிற்கு-அக்கா! தாய், தந்தைக்காகவும் தாயகத்

திற்கு ஆற்றவேண்டிய கடமையை நான் தகனம் செய்யமாட்டேன்.

**ராணி:** பாண்டிய நாட்டின் பத்தரை மாற்றுத் தங்கமே-பாவையார் சிங்கமே-பண்பின் சங்கமே பரவசப்படுகிறேன். இதோ வாள், எங்கள் திண்தோள்கள் கொண்டது தினவு-நீங்கள்தான் அதற்கு தித்திப்பான உணவு, உங்கள் குருதி-இந்த வாளுக்கு இறை என்பதுஉறுதி இப்படி பண்பாடிப் போ.

**மல்:** அங்ஙனமே போகிறேன். துரு பிடித்த வாட்களுக்கு வேலை கொடுத்த ஆட்களுக்கு என வீர வாழ்த்தை எழுதிக் காட்டுகிறேன். [மல்லிகா போனதும், சேழியன் வருகிறன் தின்னத்தூங்கியுடன்]

**ராணி:** ஓடி உயிர்க்காற்றுக் கொண்ட பேடியே! நீயே வந்து விட்டாயா?

**சேழி:** வந்து விட்டேன், பாண்டிய மாதாவை பங்கப்படுத்த வந்த சேரனை மரணச் சிறைபடுத்த வந்து விட்டேன. தாய் நாட்டுத் தன்மானக் கொடியைக் கிழித்தெறிய வந்தச்செறுக்கனை ஒழித்துக்கட்ட வந்து விட்டேன். அவன் செந்நீரைத்தொட்டு அவன் இறுதி சரித்திரத்தை எழுதி முடிக்க வந்து விட்டேன். செங்கோலை பறிக்க வந்தவர்களின் எலும்பை முறிக்க இந்த பூமியிலே பிறந்தவர்கள் முதலிடம் பெற்றவர்கள் என்பதை நிரூபிக்க வந்து விட்டேன்.

**ராணி:** கம்பிக்குள் இருக்க வேண்டிய நீர் களத்திற்குப் போக முடியாது. கட்டாயம் அனுமதிக்கமாட்டேன். சஞ்சீவி என உதவுவதாயிருந்தாலும் சண்டாளர்களை ஏற்க மாட்டேன்.

**சேழி:** தருணம் தெரியாமல் பேசுகிறீர்-தயவு செய்து உத்திரவு கொடுங்கள். தயக்கம் வேண்டாம்-தாமதம் வேண்டாம், என்னை பெற்று வளர்த்த பொன்னுட்டின் நலனுக்காகப் போருடும் பாக்கியம் கிடைத்ததே என்று ஓடி வந்தேன். தாய் நாட்டின் மானத்திற்காகப் போருடி உயிர் விட்டு மீண்டும் உயிர் பெற்று எழுந்தால் அதையும் சொந்த நாட்டின் நலனுக்காகச் செலவிடலாமே என்ற ஆர்வம் ததும்ப பறந்து வந்தேன். எந்த சிம்மாசனத்தின் மீது கண் போட்டு கைப்பற்ற வந்தானே அந்த சிம்மாசனத்திற்கு அவன் உதிரத்தால் ஆரத்தி எடுத்து திருஷ்டி கழிக்க அலைபோல் பாய்ந்து வந்தேன். போக விடுங்கள். நான் போர்க்களம் போய் உயிருடன் திரும்பி விட்டால் என்னை என்ன வேண்டுமானுலும் செய்யுங்கள். நரம்புக்கு நரம்படித்து நரக வேதனைப்படுத்துங்கள். சிறுக-சிறுக அறுத்து சித்திரவதை செய்யுங்கள். கொதிக்கும் கொப்பரையிலே போட்டு விடுங்கள். கோரத்தின் உச்சியிலே தள்ளி விடுங்கள். கொடுமை-கொடுமை என்று நீங் நினைக்கும் அளவுக்கு கொடுமைப் படுத்துங்கள். இப்போது மட்டும் களம் போக விடுங்கள், பெற்ற நாட்டிற்கு நான் ஆற்ற வேண்டியதை ஆற்ற விடுங்கள்.

**ராணி:** சொன்னது சொன்னதுதான்-துராத்மாக்களின் உதவியை நான் துளியும் ஏற்கமாட்டேன். தின்னத்தூங்கி! கொண்டு போ சிறைக்கு! ஏன் மயங்குகிருய்? என் உப்பைத்தின்று உன் ஊன் வளர்ந்தது உண்மையானுல் கொண்டு போ.

[கொண்டு போகிருன், சி றி து நேரத்தில் சேரன் வருகிருன் சில வீரர்களுடன்]

**சேர:** போர் நாள் எங்களுக்கு பொன்னுள் என்று பொலிமாடென உறும்பினுயே இப்பொழுது பார்த்தாயா? நான் நினைத்தால் உன் முத்துப் பற்களை எடுத்து என் முடியிலே பதித்துக் கொள்வேன் உன் கூந்தலை எடுத்து

சவுரியாக்கி அதை என் சேர மாதாவுக்கு பரிசளிப்பேன்.

**ராணி:** பார்வையற்றவனைத் தாக்குவது போல் நாங்கள் படுத்திருந்தபோது தாக்கியப் பாதகனே, துள்ளாதே!

**சேர:** போதும் விலங்கை மாட்டுங்கள்! (மாட்டுகின்றனர்)

## காட்சி 29

இடம்: சிற்றரசன் சேரனின் அரண்மனை (சேரன், ஆரிய குரு, சொர்ணு)

**சேர:** நான் காரியத்தில் நொண்டியாய் இருந்தேன். —வேண்டியதைச் செய்தீர்-என் திவ்விய வெற்றிக்கு திசைகாட்டியாய் இருந்தீர்.....காலமெல்லாம் போற்ற கடமைப்பட்டிருக்கிறேன்.

**குரு:** என்னை பாராட்டுவது இருக்கட்டும். பாண்டிய ராணியை வாழ்க்கைத் துணைவியாக்கிக் கொள்ள வழிக்கு க்கொண்டு வாருங்கள். நாங்கள் வடநாடு சென்று வருகிறோம்.

(ஆரியகுரு, சொர்ணு, கிட்டு மூவரும் போனவுடன்-சேரன் ராணி கட்டப்பட்டிருக்கும் இடத்திற்கு போகிறான்-அங்கே)

**சேர:** மரகத மேனியாளே-மாந்தளிர் கன்னத்தாளே மான் விழியாளே-மாங்குயில் மொழியாளே உன்னைமணக்க வேண்டுமென்பது என்ஆசை. அதற்காகவேப் போர் தொடுத்தேன்-அதற்காகவே கைது செய்தேன்.

**இரா:** என் தங்கையைக் கெடுத்துவிட்டும்-நான் இன்னொருவன் காதலியெனத் தெரிந்தும் "உன்னை மணக்க வேண்டும்" என்கிறாயே உனக்கு வெட்கமில்லை.

**சோ:** வெட்கம்! என்னைக் கண்டு வெட்கப்படும். அது எனக்கு தெரியும். இருந்தாலும் வெட்கத்தை விடும்படியான நிலைக்கு என்னை இழுத்தது உன் வேல் விழிகள். மானத்தையே விடும்படியான தன்மைக்கு என்னைக் கொண்டு வந்தது மாலைச்சூரியனையே பழிக்கும் உன்

முகம். உன் அழகைச் சுவைக்க ஆயிரக்கணக்கான அக்கிரமங்களைச் செய்யவும் நான் அஞ்ச மாட்டேன்.

**இரா:** வேண்டாம், அழகு கண்டு ரசிக்க உண்டு களிக்க அல்ல. மேலும் காதலுலகை களங்கப்படுத்தாதே-கற்புலகை கண்டபடி சூறையாடாதே. பெண்ணினத்திற்கு பெருந் துரோகம் செய்யாதே. காதலுலகம் கஷ்டப் படும்-கற்புலகம் கதறியழும். பெண்ணினம் பெரிதும் தூற்றும் அது மட்டுமா, பெண்ணாசையால் சுட்டெரிக்கப்பட்ட பேதையர்களின் சரித்திரத்தை எடு. எத்தனையோ மண்டலங்கள் மங்கையர் ஆசையால் மயானமாய் விட்டதைப்பார். பெண்ணாசை பொல்லாது-அதோடு ஆடிய வாழ்க்கை மீளாது என்பதை தெரிந்துக் கொள். ஆசையை விடு-அறிவைத் தேடு.

**சேர:** அறிவுரையால் என் அகத்தை மாற்றிவிட முடியாது. உன் சம்மதம் கிடைக்கும் வரையிலும் நான் சர்பம். மனசாட்சியை எடுத்து எறிந்து விட்ட மனித மிருகம். எனக்கு மாறாக எதைப் பேசியும் பயனில்லை. உன் மலர் முகப்-அலர்-மதி அதுதான் எனக்கு உயர் ஜோதி.

[கையை மேலே வைக்கக் கொண்டு போகிறான், தொடாதே என்று அவன் கையை தன் கையால் தட்டுகிறாள் ராணி]

**சேர:** கோபம் வேண்டாம் பூங்கொடியாளே.

**இரா:** பூங்கொடி என்று கிட்டே வராதே-நான் முற்கொடி.

**சேர:** நீ முற்கொடியல்ல-பொற் கொடி—எனக்கேற்ற ஜோடி.

[மீண்டும் கையைக் கொண்டு செல்லுகிறான் மேலேவைக்க-மல்லிகா வந்து விடுகிறாள்]

**மல்:** தொடாதே! நன்றி கெட்டவரே! நய வஞ்சகரே; என் நாசத்தை நேசம் கண்டவர், மோசம் செய்வதில் பாசம்

கொண்டீர் என் அக்கா செய்த நன்மைகளுக்கு இதுவா உன் நன்றி.

**இரா:** நன்றி! நன்றிக்கு அர்த்தம் இந்த நரிக்கு எங்கே தெரியப் போகிறது, பிறர் வாழ்வோடு விஷமத்தனம் செய்வதற்கே முழு பிரயத்தனம் செய்யும் இந்தமாதிரியான கருத்துக் கூனர்களிடம் நன்றியைத்தான் எதிர்ப் பார்க்கலாமா? பிறரை கெடப்பது இவர்களுக்கு கேளிக்கை, பிறர் உள்ளத்தை வாட்டுவது இவர்களுக்கு உல்லாசப் பிரயாணம்.

**சேர:** ஆம்! இப்போது என்ன சொல்லுகிறாய்? உன் அழகு என்னை ஆக்குகிறது கழுகு, கொத்தி சாப்பிடப் போகிறேன்.

**மல்:** கொத்த ஆரம்பித்தால் நாங்கள் "பொத்த" ஆரம்பிப்போம்.

**சேர:** அவ்வளவு தூரம் துணிந்து விட்டாயா?

**மல்:** துணிந்து விட்டேன்-உன் துரோகத்தனம் எனக்குத் துணிவைத் தந்துவிட்டது, இனி அஞ்சமாட்டேன். அக்கிரமத்தின் முடிவைக்காண என் ஆயுளை பந்தயம் வைப்பேன். காமம் வழியும் கண்களை தோண்டி எறிவேன். கட்டியணைக்க துடிதுடிக்கும் கைகளை வெட்டித்தள்ளுவேன். கொத்த நினைக்கும் கோரப்பற்களை பிடுங்கிப் போடுவேன். உன் நெஞ்சம் கட்டிய ஒவ்வொரு கோட்டைகளுக்கும் நெருப்பு வைப்பேன்.

**சேர:** [உறும்பிக் கொண்டே] இவளையும் பிடித்துக் கட்டுங்கள். வருகிறேன்.

## காட்சி 30

(இடம்: வட நாடு அரண்மனை(வ. மன்னன், ஆரிய தரு, கிட்டு, சொர்ணு)

**சொர்:** கச்சிதமான சமயம் கிட்டி விட்டது இனி கண்ணை மூடிக்கொண்டு இருக்கக்கூடாது.

**கிட்:** [விழிகளை அகலத் திறந்து] இப்படி திறந்து கொண்டிடிருந்தால் போதுமா?

**சொர்:** போதாது பயந்தோ-பதுங்கியோ சேரன் செங்கோலை சயிக்க வேண்டும், இதுதான் இதுவரை நாம் கையாண்ட ஜாலம்-நமக்குத் தரும் அறுவடை காலம், ஏமாறக் கூடாது.

**கிட்:** ஏமாந்தால் பிடித்துவிடும் பீடை, பிறகு ஆசையெல்லாம் ஏறி விடும் பாடை. அப்புறம் இப்படி உட்கார வேண்டியதுதான். [தலை மேல் கையை வைத்துக் கொண்டு உட்கார்ந்து காட்டி] எங்கே என்று கேட்பீர்கள்-எங்கே என்று எனக்கே தெரியாது.

**குரு:** ஒரு வகையில் நீ செப்புவதும் வாஸ்தவந்தான் என்ன மன்னரே! இவர்கள் நவின்றதை நீங்கள் நன்ருக கவனித்தீர்களா? நானே விளக்கமாகச் சொல்லுகிறேன்-நம் திட்டம் முற்று பெறக் கூடிய கட்டம் இதுதான் என்பது எப்படியென்ருல் பாண்டிய ராணியை நம்முடைய உதவியால் சேரன் சயித்து விட்டான் என்ருலுங்கூட பாண்டிய ராணியிடம் போரிடும்போது சேரன் படைக்கும் பெருத்த நட்டம் ஏற்பட்டுள்ளது. எனவே இப்போது சேரன் வசம் சொற்ப படைகளே உள்ளன. சொற்ப படை உள்ள அவனை நாம் அற்ப கஷ்டத்தில் முறியடித்து விடலாம். வெற்றி விழா வெகு சுலபத்தில் நடத்தலாம். எனவே இன்று இரவே சேரனை இடியெனத் தாக்குவோம் அவன் செங்கோலை நம தாக்குவோம்.

**கிட்:** குருஜீ: இப்படி தந்திரம் செய்யும் நீ ஒரு மனுஷன்தான்? ஊதாரிப் பயலே நீ உருப்படுவாயா? நல்லதைகொஞ்சமும் அறியாத நச்சுக்கடலா? நீசமாய் போ. போ. போ.

**ஆரி:** டேய்-என்னடா சாபம் கொடுக்கிறுய்?

**கிட்:** நான் கொடுக்க வில்லே குருஜி, ஜனங்க கொடுத்தால் என்ன செய்வீங்க என்று கேட்கிறேன்,

**ஆரி:** அதையெல்லாம் பற்றி உனக்கென்ன? அடுக்கடுக்கா வேறு பேசுகிறுயே, உன்னுல் எப்படி முடிகிறது.

**கிட்:** அடுக்கடுக்கா என்ன குருஜி; இனிமேல் நான் வாயைத் திறந்தாவே பொன்மொழிங்க கொட்டு-கொட்டு வென்று கொட்டுங்க.

**ஆரி:** கொட்டும்-கொட்டும் (மன்னனேப்பார்த்து) மன்னவரே; இன்றிரவே சேரன் படையைத்தள்ளு-பாடுவோம் வெற்றிபள்ளு என்று தளபதிக்கு உத்திரவு போடுங்கள்.

**வ. ம:** போர்க்களம் நீரும் வருகிறீரா?

**கிட்:** போர்க்களத்திற்கா? என் குருஜியா! வருவார் என்று எதிர்பார்க்கிறீரா! தப்பு-தப்பு நீ வா என்று என்னே அழைக்கப் பொறீங்க கத்தியைப் பார்த்தாவே இப்படி சுத்தி விழுந்திடுவேன். (விழுகிறுன்)

## காட்சி: 31

இடம்: முகலாயன் அரண்மனே. (முகலாயன், கபூர், தின்னத் தூங்கி, சேழியன்)

**முக:** (சேழியனேயும், தின்னத்தூங்கிகையும் பார்த்து) ஏன் அங்கேயே நிற்கிறீர்கள்? வாருங்கள்! யுத்தம் என்ருல் சித்தம் கலங்காத ராணியை தூங்கிக் கொண்டிருந்த நேரத்தில் தோல்வி ஸ்தானத்தில் தூங்கி எறிந்தானே தந்திரக்காரன் சேரன், அவன் நிலேயைப் பார்த்தீர்களா? வடமன்னனிடம்கோட்டையை விட்டுவிட்டானும்?வாழ்ந் தால் போது மென்று தப்பி விட்டானும்?

**சேழி:** உண்மை தான்.

(இப்போது கண்கலங்கும் முகத்தோடு ஓடிவருகிறன் சேரன்)

**சேர:** சேழியரே! என்னை மன்னிப்பீரா? தூய்மையான உங்கள் வாழ்க்கையோடு நான் துரோகத்தனத்தால் விளையாடி விட்டேன். கண்ணியம் என்னை காணக்கூசும், மாண்பு என்னை மனிதன் என்று சொல்லவேச் சொல்லாது, அவ்வளவு மட்டமாக நடந்து கொண்டேன்.

**சேழி:** அப்படி நீர் என்ன நடந்து கொண்டீர்?

**சேர,** காதலில் நிலையற்றுப்போய் ஒரு கொலைக்கு காரணமாய் இருந்த கொடியவன் என்ற பழிக்கு உம்மை ஆளாக்கியது நான் தான்.

**சேழி:** எப்படி?

**சேர:** ஒரு ஆரியன் விரித்த அக்கிரமவலையில் அகப்பட்டுக் கொண்டேன். அவனுடைய பெண்ணும் சிங்கார ரூபம் காட்டிஎன்னை சிறைபிடித்து விட்டாள். அவர்கள் ஆட்டும் பம்பரமானேன்—அடித்துவிட்டபடி உருளும் பந்தானேன்.பொறுமையால் உங்கள்கல்லியாணத்தை நிறுத்த பெருத்த அவா கொண்டிருந்த என்னை அவர்கள் காரிய சித்திக்கு கையாளாகக் கொண்டு தட்டி விட்டார்கள். ஒரு வாலிபப்பெண்ணை உலகத்தை விட்டுத்துரத்தி, அங்கே, இத்தனை நாட்கள் என்னை மணம் புரிந்து கொள்வதாகச் சொல்லி தளபதி செழியர் வைத்திருந்தார் இன்றுஎனக்குதுரோகம்செய்துவிட்டு பாண்டியராணியை மணந்து கொள்ள ஏற்பாடு செய்து கொண்டார், இனித்த உலக வாழ்வு கசந்தது-தற்கொலை புரிந்து கொண்டேன், இப்படி அந்தப் பெண் எழுதுவதைப் போல் எழுதி போட்டு விடுவோம் என்று பாடந் தந்தார்கள்—அவர்களையே படிக்கவிட்டேன். முடிவு கொலைக்கு காரண கர்த்தாவாக நீர் கருதப்பட்டீர். உம்

முடைய நயவஞ்சகந்தான் அவளுக்கு நமனுகமாறியது என்று நாட்டுமக்களால் தூசிக்கப்பட்டீர்.

**சேரு:** அப்படியா?

**சேர:** அதுமட்டுமல்ல காதலின் ஓதமாய் இருந்த என் அகத்தை காயவிட்டு மல்லிகாவுக்கும் காதகம் செய்தேன். ஆரியனையும் ஆரியப்பெண்ணையும் தூண்டு கோல்களாகக் கொண்டு ராணியை ஜோடியாக்கிக் கொண்டால் அந்த நாட்டுபட்டம் கிடைக்கும் என்று திட்டம் போட்டு போர் தொடுத்து கைது செய்து பலாத்கார முயற்சியில் தோற்றும் போனேன்.

**சேழி:** பிறகு?

**சேர:** எந்தஆரியனை அழுத்தமாக நம்பி இவ்வளவு அனியாயங்களையும் அஞ்சாமல் செய்தேனே அதே ஆரியனின் சதிக்கு சாம்ராஜ்ஜியத்தையே இறையாக்கி விட்டேன். வடநாட்டு மன்னனின் கூட்டுறவால் கோட்டையையே வளைத்துக் கொண்டான். சத்தியத்தின் சன்னிதானமாகக் கருதினேன் சதியின் தூகையாகி விட்டான்.

**சேழி:** கவலைப்படாதீர்.

**சேர:** சேழியரே! என்னைமன்னிப்பீரா? உங்களுக்கு கொடுமை செய்வதை கொண்டாட்டமாகக் கொண்ட என்னை மன்னிப்பீரா? சண்டாளத்தனத்திற்கு சம்மந்தியாகி சத்தியத்திற்கு சத்ருவான என்னை மன்னிப்பீரா?

**சேழி:** சேரரே! நீர் தவறை உணர்ந்ததே நான் தந்த மன்னிப்பு. எழுந்திரும் இனிமேலாவது கள்ளமற்ற அன்பை கட்டி வளர்ப்போம். ஆம்! இராணியும், மல்லிகாவும் எங்கே?

**சேர:** என்னால் சிறையில் தள்ளப்பட்டிருந்த அவர்கள் வடவனிடம் சிக்குண்டார்கள் என்று தான் சொல்ல வேண்டும்.

**கபூ:** அப்படியா! சேழியரே உத்திரவு கொடுங்கள் வடவனி டம் போய் விடும்படி கேட்கிறேன் மறுத்தால் இப்படி (தாளிம் அடி பலவாறு கட்டி) நான்கு சுற்றுபோட்டு அவன் மமதையை மண்கவ்வச்செய்கின்றேன். ஆண வத்தை அடித்துக் கொல்லுகிறேன்.

**சேழி:** கபூர்! இனி வாளுக்கோ. வலிமைக்கோ வேலை இல்லை. வஞ்சகத்தால் நாட்டைப்பிடித்துக் கொண்ட வடவனை வஞ்சகத்தால் தான் அடித்துத் துரத்தவேண்டும். வாளாலும், வேலாலும் வஞ்சகத்தை வெல்ல முடிவ தில்லை. மோசத்தை மோசத்தால் தான்மொட்டையடிக்க முடிகிறது.

**கபூ:** அப்ப: தந்திர திட்டத்தை நானே தயாரிக்கிறேன். அதா வது (சேழியனையும், சேரனையும் காட்டி) நீங்க! இரு வரும் சாமியார் வேஷம் போட்டுக்கொள்ளுங்கள். நானும், தின்னத்தூங்கியும் சிஷ்யர்களாய் வருகிறோம். வடநாட்டான் கோட்டைக்குள் நுழைவோம். அவனை வீழ்த்துவதற்கான வழியைஅங்கேயே வகுப்போம். எப்படி என் யோசனை?

**சேழி:** பொல்லாத நேரத்திற்கேற்ற பொன்னன யோசனை. சிஷ்யர்காள்.

**கபீ:** (தின்னத்தூங்கியும், கபூரும் சுவாமிகாள் என்று வணங் குகின்றனர்)

**சேழி:** புறப்படுங்கள்.

## காட்சி 32

இடம்: பாண்டிய நாட்டு அரண்மனை

[வடமன்னன், ஆரியகுரு, கிட்டு.]

**வ. ம:** பாண்டியநாட்டு சிம்மாசனத்தில் உட்காரும் பாக்கியத் திற்கு பாதை போட்டக் கர்த்தாவே, பாருட்டுகிறேன். கண்ட கனவுகளை கைகூட விட்டீர். என் உள்ளத்தில் நிழலாடிக்கொண்டுருந்ததை இந்தஉலகத்தில் நிஜமாக்கி விட்டீர்.

**ஆரி:** அதிகப்படியான பாருட்டு!

**வ. ம:** கரையின்றி வாழ்த்தினுலும் என் காணிக்கை தீராது.

**வீரன்:** மன்னர் பிரானே! இ ர ண் டு சாமியார்கள் வந்திருக்கி றார்கள், தங்களை காண வேண்டுமாம்.

**ஆரி:** சாமியார்களா? ம ன் ன ரை பார்க்க முடியாது என்று சொல்லிவிடு.

**வ. ம:** வேண்டாம். அவர்களுக்கு உண்டானுல் கோ ப ம் — கொடுத்துவிடுவார்கள் சாபம், என்று நீங்களே சொல்லி யிருககிறீர்கள். வீரனேவரச்சொல், வாருங்கள் வரவேற் போம்.

(சாமியார் வேஷத்திலிருக்கும் சேழியன், கோட்டியார் வருகின் னர்)

**வ. ம:** வரவேண்டும்! வரவேண்டும்!! பூஉலகிற்கு வழிகாட்டும் புண்ணியச் சேத்திரங்களே! வரவேண்டும்!! பக்தியின் பெருமையை பாருக்கு சொல்லிவரும் பரிசுத்தப் பூபதி களே வரவேண்டும்!!! த ங் க ள் பாதங்கள் பட்டதால் இங்கிருந்த பாபக்கறை நீங்கி விட்டது.

**ஆரி:** தங்கள் தரிசனம் எங்கள் பாபவிமோசனம்.

**தின்:** எங்கள் தரிசனம் உங்கள் பாபவிமோசனம் எ ன் றா ல் நீங்கள் எல்லாம் பாபம் செய்த பாபிகளா! என்னென்ன பாபம் செய்தீங்க ஒரு பட்டியல் போ ட் டு கொடுங்க அதற்கெல்லாம் முறுப்பு சொல்லி அனுப்பவேண்டிய இடத்திற்கு அனுப்பிவிடுகிறோம்.

**வ. ம.** மனிதன் எத்தனையோ பாவங்களைச் செய்து விடுகிறான், எப்படி சொல்ல முடியும்? சுவாமிகளே! தங்களைப் போன்றவர்கள் தான் எங்கள் பாவங்களைத்துடைத்து பரலோகத்திற்கு அனுப்ப வேண்டும்.

**கபூ:** அனுப்பத்தானே வந்திருக்கிறோம்.

**கிட்:** மன்னரே! இந்த மன்னுலகத்தை விட்டு அந்த மாயா உலகத்திற்குப்போக எனக்கு ஒரு வழி தோன்றுகிறது.

**வ. ம:** சொர்க்கம் போக உனக்கும் வழி தோனுகிறதா? சபாஸ்! சொல் பார்க்கலாம்.

**கிட்:** பிரமாதம் ஒன்றுமில்லை. இரக்கை கட்டிக்கொண்டு பறந்து போய்விடலாம், இரக்கை கிடைக்குமா?

**குரு:** போடா முட்டாள். உன்மண்டையில் மண்ணுங்கட்டி. தான் இருக்கிறது.

**கபூ:** மண்டையில் போய் மண்ணுங்கட்டி எங்கேயாவது இருக்குமா? நீங்க முதலில் விஞ்ஞானம் படியுங்க.

**வ. ம:** அவர் கோபமாகச் சொன்னார், நீ அப்படியே எடுத்துக் கொள்கிறாய். சுவாமிகாள்' சாப்பிட்டு பேசலாம், வாருங்கள்.

**காட்சி: 32-I**

இடம்:- பாண்டியநாட்டு அரண்மனை [ஆரியகுரு, கிட்டு, சொர்ணு]

**குரு:** சொர்ணு! இராஜயோகம் நமக்கு கிடைக்காமல் போகாது என்பது என் யூகம் என்றதற்கு, ஆகும் என்று என்னால் நினைக்கவும் முடியவில்லை என்றாய். ஆகும் காலம் நம்மை அண்டி விட்டது. சொல்லவேண்டும் என்று சொன்னால் யோகம் நம்மைத்தேடி வேகமாக வருகிறது என்றே சொல்லலாம்.

**சொர்:** எதை நினைத்து இப்படி சொல்லுகிறீர்களப்பா?

**குரு:** சொர்ணு! மகான்கள் என்று வந்திருப்பவர்கள் மகான் களல்ல நம் மாவிரோதிகள் சேழியன், சேரன் கோஷ்டி.

**சொர்:** அவர்களா! உலவு பார்க்க வந்திருக்கிறுர்களா?

**குரு:** உலவு பார்த்து நமக்கு உலைவைக்கத்தான் வந்திருக்கி றுர்கள்.

**சொர்:** எனக்கு பயமாக இருக்கிறதப்பா.

**குரு:** பயப்படாதே—பரவசப்படு! அவர்கள் அரசயோகத்தை நம் வாழ்விலே தேக்கத்தான் வந்திருக்கிறுர்கள். நம் வாழ்வில் பொன்யுகத்தை பொலிவிக்கத்தான் வந்திருக் கிறுர்கள். நம்மை மங்களகீதம் பாடவிட்டு அவர்கள் மரணகீதம் நிச்சயம் பாடப்போகிறுர்கள்.

**சொர்:** எப்படியப்பா?

**குரு:** கேள். இன்று இரவு வடநாட்டு மன்னனை வானுலகுக்கு வழியனுப்புவோம். அதாவது நமக்கு பழக்கமான கொள்ளைக்கூட்டத்தலைவன் கோரனைவிட்டு கொன்று விடச்செய்வோம். நாளை காலை சேழியன் கோஷ்டியைக் காட்டி இவர்கள்தான் மன்னனைக் கொண்றிருக்க வேண் டும்—இவர்கள் மகான்கலல்ல என்று வேஷத்தைப் பிரி த்துக் காட்டி விட்டால்....சிறைச்சேதம் அவர்களுக்கு சிம்மாசனம் நமக்கு.

**சொர்:** அது எப்படியப்பா முடியும். அவர்களை வேண்டுமானுல் தூக்கில் போட்டு விடுவார்கள்-அரசு நமக்கு எப்படி கிட்டும்?

**குரு:** வழி இருக்கிறது. (கிட்டு ஒருமாதிரியாக வருகிறுன்.) எ ானடா ஒரு மாதிரி? என்ன யோகிக்கருய்?

**கிட்டு:** நரகம்போக என்ன செய்யனும் என்று யோசிக்கிறேன். ஏன் என்று சொன்ன எல்லாம் சொர்க்கபோக ஆசைப்

பட்டு போயிட்டா அங்கு இட நெருக்கடி ஏற்பட்டு விடாது அதனுலேதான்.

**குரு:** அப்ப! பாவம்செய் நரகம் போய் விடுகிருய்.

**கிட்:** பாவமா? உங்ககூட சேர்ந்து தான் நிறைய........?

**குரு:** சீநாயே! இனிமேல் இப்படி சொல்லப் போகிருய். நீ வர வர கெட்டுவிட்டாய்.

**கிட்:** சனங்ககூட அப்படித்தான் சொல்ருங்க அணு ஒன்னு சேர்த்து சொல்லுருங்க.

**குரு:** என்னடா சேர்த்து சொல்லுகிருர்கள்?

**கிட்:** நானு உங்ககூட சேர்ந்துதான் கெட்டுவிட்டேனும்.

**குரு:** சீ கழுதை. அப்ப நான் என்ன கெட்டவனு? பாவியா?

**கிட்டு:** உங்க பழக்கத்தை பாடபுத்தகமாகக்கொண்டு படித்து பார்த்ததிலே நீங்க பாவிதான் என்று நான் சொல்லலே உங்ககூட முன்னே பழகியவங்க சொல்ருங்க.

**குரு:** சொன்னுல் சொல்லிப்போகிருர்கள் நீஇந்த கடிதத்தைக் கொண்டுபோய் கொள்ளேத்தலேவன் கோரனிடம் கொடுத்து உடனே அழைத்து வா.

(சரி என்று வாங்கிக்கொண்டு போகிருன். கோரனும் வந்து விடுகிருன்)

**குரு:** நேற்றே வருவதாகச் சொன்னநீர் இதுவரையில் வர வில்லேயே என்று இப்பொழுதான் கடிதம் கொடுத்து கிட்டுவை போய்வா என்றேன் நீர் வந்து விட்டீர். கிட்டு! நீ வெளியே போ! நாங்கள் கொஞ்சம் பேசவேண்டும். ஹீ! அந்தக்கடிதத்தைக் கொளுத்தி விடு (சரி என்று போய் மறைந்து நின்று பேசுவதை கவனிக்கிருன்)

நாட்டு மன்னனை மரணபுரிக்கு விரட்டியடிக்க வேண்டு மென்று சொன்னேனே அதற்கான சமயம் நம்மைத் தேடி வந்திருக்கிறது. சேழியன், சேரன், முகலாய மன்னனின் நண்பன், இன்னும் யாரோ ஒருவன் ஆகிய நால்வர் காசாய உடையால் தங்களை மறைத்துக் கொண்டு மகான்களாக வந்திருக்கிறார்கள் அரண்மனைக்கு. இந்த அவர்கள் வருகையை வைகையாகக் கொண்டு இன்றிரவு மன்னனுக்கு எமலோகத்தின் அழைப்பை நீட்டிவிட்டு காலை எதிரிகளின் காசாயத்தை கிழித்து இவர்கள் தான் இந்தப்பாதகத்தை செய்திருக்க வேண்டும் இல்லையானால் எதிரிகளாகிய இவர்கள் மாறுஉடையில் வேடதாரி களாய் வரவேண்டிய அவசியமில்லை என்றுகூறி விட்டால்....நாடு நம்பும், சட்டம் அவர்களை சம்மாரம் செய்துவிடும். பிறகு சொல்லவா வேண்டும் நீண்டநாள் எண்ணம் நிறைவேறிவிடும். ஆனந்தம் அனுராகம்பாட, வரையில்லா இன்பம் வாத்தியம் வாசிக்க வாழ்வே வலம் வரும்.

**கோர:** சரி, இன்றிரவு மன்னன் எங்கிருப்பான்?

**சொர்:** இரவு உண்டி முடிந்ததும் நானும் அவரும் பாரு இல்லாமல் வசந்த மாளிகைக்கு போகப்போகிறோம் அப்பொழுது நீர் சுலபத்தில் வேலையை முடித்து விடலாம்—மன்னனை முடிவில்லா யாத்திரைக்கு வண்டி ஏற்றி விடலாம்.

**கோர:** சரி வாருங்கள். (போனபிறகு மறைந்திருந்த கிட்டு திரைக்கு வந்து)

**கிட்:** நீ போ நாங்க பேசனும். படுபாவி! உன் தலைமேல் மலை குண்டு விழ-உன்னை காலன் கொண்டுபோக. கடிதத்தை கொளுத்த வாச்சொன்னாய்! கடிதத்தை கொளுதப்போவதில்லை; கடிதத்தைக்கொண்டு உன்னை கொளுத்தப்போகிறேன். உன் திட்டம் உன்னையே மட்டம்

தட்டும்படிச் செய்கிறேன். (கபூர் வருவதைப் பார்த்து) வாப்பா வா!

**கபூ:** ஏனப்பா! நீ குருவுக்கு என்ன வேண்டும்?

**கிட்:** ஒன்னுமில்லே! நான் அவர் சிஷ்யன்.

**கபூ:** அந்தரங்க சிஷ்யனும் நீ தானு?

**கிட்:** ஆம்.

**கபூ:** நீதான் அந்தரங்க சிஷ்யன் என்ருல் நான் ஒப்பமாட்டேன். அவருடைய அந்தரங்கம் உனக்கு என்ன தெரியும். ஒன்னு சொல்ல முடியுமா உன்ஞல்?

**கிட்:** என்னே அவ்வளவு மட்டமா நினேக்காதே. இன்று இரவு சொர்ணவும்-மன்னரும் வசந்தமாளிகைக்குப் போகும் போது மன்னனே கொலே செய்யப் போகிருர்கள்-இது எனக்குத்தெரியும், தெரியுமா? ஐயோ! சொல்லக் கூடாததைச் சொல்லி விட்டேனே! (கபூர் கிட்டுவின் முகத்தையேப் பார்க்கிருன்) நான் என்ன செய்வேன்! இந்தப்பா! என்ன என்னேயே பார்க்கிருய்?

**கபூ:** ஆ! இந்நேரம் நீ என்ன சொன்னுய்?

**கிட்:** சொன்னதை நீ கவனிக்கவில்லேயா? நல்லதாப்போச்சி.

**கபூ:** என்னுடைய கவனமெல்லாம் உன் முகத்தின் மீதே போய் விட்டது.

**கிட்:** என் முகம் அவ்வளவு நல்லா இருக்கா?

**கபூ:** இருக்காவா? உன் தளிர் முகம்—குளிர் நிலவு, முத்தம் ஒன்று கொடுக்கிருயா?

**கிட்:** போய்யா! போய்யா!! (சரி என்று போய் விடுகிருன்)

**காட்சி: 32 II**

(பாண்டிய நாட்டு வசந்த மாளிகைக்குப் போகும் பாதை)

(வசந்த மாளிகையை நோக்கி வடமன்னனும், சொர்ணவும் போகின்றனர். ஏற்பாடுபடி மன்னனைக்கொல்ல கோரன் வேகமாக ஓடி வருகிறான், கல்தடுத்து கீழே விழுகிறான். அரவங் கேட்ட அரசன்திரும்பிப் பார்க்கிறான். விழுந்தகோரனே எழுந்து கத்தியை நீட்டியபடி மீண்டும் ஓடுகிறான். வேந்தன் அலறுகிறான். அப்போது சேழியனும், அவன் ஆட்களும் வந்து கோரனைத் தடுத்து அடிக்கின்றனர்)

**கபூ:** உங்க இரண்டுபேர் கூட சண்டைபோட இவன் தகுதியே இல்லை; நாங்களே பார்த்துக்கொள்கிறோம்.

(கபூரும்—தின்னத்தூங்கியும் மாறி-மாறி அவனைப்பிழிகின்றனர்)

**தின்:** நிறுத்திக்கொள் கபூர், செத்து விட்டால் விசாரிக்க முடியாது.

**கபூ:** சரி.

**வ. ம:** காலனாக வந்தான், கடவுளாக வந்து காத்தீர்கள்.

**சேழி:** மனிதனாகத்தான் வந்து காத்தோம்; இழுத்து வாருங்கள்.

**காட்சி: 32–III**

(பாண்டிய நாட்டு விசாரணை மண்டபம்)

**வ. ம:** என்னைக்கொன்று என்வாழ்வை மென்று சுவைக்க வந்த கொடியவனே! உனக்கு நான் என்ன செய்தேன் கொடுமைநீரன் என்னைகொல்லவந்தாய்?சொல்! ஊமைத்தனம் உயிரை மீட்டுவிடாது, மெய்வேண்டுமானல் உய்விக்கச்செய்யும், சொல்கூசாமல் கொல்லவந்தவனே

பேசாமல் ஏன் இருக்கிருய்? மௌனம் உன் வாழ்வைக் கௌவிவிடும்; அஸ்தமனம் செய்துவிடும்; சொல்!

**சேழி:** சொல்லிவிடு! இவர்உயிரை வாங்கும் உணர்ச்சியை உனக்கு ஊட்டியக்கிராதனை உரைத்துவிடு. இவரைக் குத்திக்கொல்லும்படிஉன்புத்தியை மாற்றியப்பேயனைக் கூறி விடு.

**வ. ம:** தாங்கள் சொல்வதிலிருந்து இவன் வேறு ஒருவனுல் தூண்டப்பட்டிருக்கிருன் என்பது புலனுகிறது. அப்படி தூண்டிவிட்ட துன்மார்க்கன் தங்களுக்குத் தெரியுமா?

**சேழி:** தெரியும். சாம்ராஜ்ஜியத்தின் மீது மோப்பம் கொண்டு உம்மை ஏப்பம் விட நினைத்த அந்தப்பாவி தெரியும். உள்ளமெல்லாம் கள்ளம் கொண்டு உம்வாழ்வை மெல்லக் கருதிய அந்ததுஷ்டன் வேறுயாருமல்ல, பரலோகத்திற்குப் போகபாடம் சொல்லித்தரும் வாத்தியார் என்று உம்மால் பயபக்தியுடன் சொல்லப்படுவானே ஆரிய குரு, அவன் தான்.

**வ. ம:** அவரா?

**சேழி:** ஆச்சர்யமாயிருக்கும். உண்மை உதயமாகும் போது, வாய்மை வடியெடுக்கும் போது ஆச்சர்யம் கிளர்ந்தெழுவதிலே ஆச்சர்யமில்லை - அச்சம் முளைத்தாலும் வியப்பொன்றுமில்லை.

**வ. ம:** அப்படியென்ருல் அவர் நெஞ்சிலே இருந்த நஞ்சை ஒளிக்க என்னிடம் வாஞ்சை காட்டி வந்தார். தான் ஒரு மாய்மாலப் பூச்சி என்பதை மறைக்க மழலை போல் நடித்து வந்தார். உள்ளபடியே அவர் எனக்கு மரணம்தர வந்த கிரணம் தான் என்கிறீரா?

**சேழி:** ஆம். கைதியே நீங்கள் உருவாக்கிய திட்டத்தின் ஒவ்வொரு அங்கமும் எனக்குத் தெரியும். நீங்கள் எந்த நோக்கத்தோடு மன்னரை வீழ்த்த வந்தீர்கள்

என்பதையும் அறிவேன். ஆரியகுரு போடும் புள்ளிக்கு கொள்ளி வைக்கத்தான் இங்கு நான் வந்ததும். சொல் அரசரைக்கொல்லும் அநியாயத்தைச் செய்யும்படி ஆரிய குரு தானே உன்னை ஏவிவிட்டான்?

**கோர:** ஆம்.

**வ. ம:** ஆம். இவ்வளவு கொடுமையின் கோட்டையா அவன்! என்மகுடத்தைக் கொள்ளையாட வந்தக்கடையன் அவன்! என் கோட்டையை வேட்டை போட வந்த தறுதலையா அவன்!! இழுத்து வாருங்கள் (வீரர் இருவர் போக எதிரில் ஆரிய குரு வருகிறான். அவரே வந்து விட்டார் என்று வீரர் திரும்புகின்றனர்)

**வ. ம:** கூண்டில் ஏறுங்கள்.

**ஆரி:** நானு?

**வ. ம:** சே—சே—நீங்கள் ஏறலாமா?

**ஆரி:** அதானே கேட்டேன்.

**வ. ம:** சரிசரி ஏறும். டேய் ஐயாவை கூண்டில் ஏற்று.

(நானே ஏறுகிறேன் என்று ஏறிக்கொள்ளுகிறான் ஆரியகுரு.)

**வ. ம:** (சோரனைக்காட்டி) அந்தக்கைதி உமக்குத் தெரியுமா?

**ஆரி:** தெரியாது. நான் எப்போதும் இந்தக்கைதியைப் பார்த்ததில்லை.

**கோர:** பார்த்ததில்லை? அடபச்சோந்தி நீயா என்னைப்பார்த்ததில்லை? பார்வேந்தனை நிலையானத்தூக்கத்தில் சேர்த்து விட்டால் நமக்கு பட்டாபிசேகம் நடத்தும்படிச் செய்து விடலாம். அரியானம் எனக்கு அதற்கடுத்தாசனம் உனக்கு என்றெல்லாம் கூறிவிட்டு இப்போது பார்த்ததே இல்லை என்று சொல்லுகிறாய்.

**ஆரி:** மன்னரே! இவனை நம்பாதீர்கள். இவர்களையும் நம்பாதீர்கள். இவர்கள் யார்? நம்முடையஎதிரிகள். சேரன், சேழியன், நிலையறிந்து நமக்கு உலைவைக்க வந்திருக்கிறார்கள். இராணியையும், மல்லிகாவையும் காப்பாற்ற, இழந்த நாட்டை மீண்டும் கைப்பற்ற ஒற்றர்களாக வந்திருக்கிறார்கள்.

**சேழி:** உண்மை. ஆரம்பத்தில் இவர் சொன்ன நோக்கத்தோடு தான் நாங்கள் இங்கே புகுந்தோம். ஆனல் இந்தக்கெட்

டவர் உங்களை வேட்டைநாயாகப் பயன் படுத்திக்கொள் வதைப்பார்த்து திட்டத்தை மாற்றிக்கொண்டோம். இவர் தீயவர் என்பதை விளக்கிவிட்டால் தீட்டுப்பட்டுப் போன உங்கள் உள்ளம் திருஉள்ளமாய் விடும் என்று தீரஎண்ணினோம். உங்களை முடிவுகட்ட இவர்கள்காலம் குறித்ததைக் கண்டு பிடித்தோம். மேல் கொண்டு நடந் தது நீங்கள் அறிந்ததே.

**வ. ம**: ஆம். ஆனல் இவர் கைதியை தெரியாது என்கிருரே!

**கிட்**: இங்கே! நான் கொஞ்சம் சொல்ல வேண்டிருக்கு.

**ஆரி**: நீ என்ன சொல்லப்போகிருய்?

**கிட்**: சொல்லப்போகிறேன்! லட்டுக்கு உப்பில்லை என்று. நீ உண்மை வெளி வருமலிக்க போட்டுள்ளப் பூட்டை உடைக்கப்போகிறேன்.

**ஆரி**: கொஞ்சம் பயபக்தியோடு பேசு.

**கிட்**: பயபக்தி! பலம் என்னவிலே? மன்னரே! கைதி கோரன் தெரியவேதெரியாது என்கிருரே தெரியாமல் தான் இந்த முடங்கலை எழுதினருகேளும்.

(மடலைநீட்ட அதை வீரன் ஒருவன் மன்னனிடம் சேர்க்கிருன்)

**வ. ம**: [படிக்கிருன்] ஒரே உதவி அதற்குநான் தரப்போவது மந்திரி பதவி என்று சொல்லி வந்தும் இது வரையில் காணேம் உம்மை. எனவே இந்த அஞ்சலை எழுது கிறேன். கண்டதும்காற்றென வாரும். இன்று என் மகளுடன் பாரு இல்லாமல் மன்னன் வசந்தமாளி கைக்குப் போகப் போகிருன். அருமையான சமயம் நம் அதிர்ஷ்டம் அடங்கியிருக்கும் அற்புதமான சமயம், கோரரே தவருதீர். [முடிகிறது] பார்வைக்கு சாது. உள்ளமெல்லாம் சூது, பழகுவதில் பசு. கெடுப்பதில் பிசாசு.

**கிட்**: மகாராஜா! உலகத்தை ஏமாற்றும் முறைகளைப் படிக்க உலகத்திலேயே ஒரு பள்ளிக்கூடம் இருக்கிறது என்ருல் அந்தப் பள்ளிக்கூடம் இவர்தான்.

(கபூரும், தின்னத்தூங்கியும் சொர்ணவை இழுத்து வந்து)

**கபூ**: அந்தப்பள்ளிக்கூடத்தில் படித்து முதல் தரமாகத்தேரிய புண்ணியவதி இவள்தான்.

வ ம: உண்மை. சபையோர்களே! இந்த மண்டலத்தை விழுங்க வந்த இந்த மர்மபூதங்களுக்கு பத்துவருட சிறை தண்டனையும், இவர்கள் கையிக்கு தூண்டில் உணவு போல் உபயோகப்பட்ட கோரனுக்கு இரண்டு வருட தண்டனையும், உங்கள் சார்பாக வழங்குகிறேன். சேனாதிபதி! மூவரையும் சிறையில் அடைத்துவிட்டு, ராணிஅம்மையையும் மல்லிகாவையும் சிறையினின்று அழைத்துவா, எதிரியையும் காக்கும்எழில் பண்பு படைத்த தமிழர்களே என்ன கைமாறு செய்யப்போகிறேன் உங்களுக்கு நான்! தமிழ் மண்ணில் பிறந்தவர்கள். எதிலும் சிறந்தவர்கள், தர்மம் தவரு தங்க குணம்-தழைத்து வளருமிடம் தமிழரினம் என்பதை நிலைநாட்டினீர்கள். தோற்ற நாட்டைப் பெற்று கொள்ள வேண்டும் தப்பு! தோற்றீர்கள் என்று சொல்வதுபொருந்தாது ஏன்என்ருல் சூழ்ச்சியால் தான் உங்களை நான் வெல்ல முடிந்தது.

(ராணியும், மல்லிகாவும் வருகின்றனர்)

சேர: இராணி! மல்லிகா! என்னை நீங்கள் மன்னிக்கவேண்டும். தூய்மையான உங்கள் பண்பு எனக்கு துரோகி என்று பட்டமளிக்கிறது. நீதி என்னை நீசன் என்கிறது-மனசாட்சி என்னை மாபாவி என்று கூறுகிறது. நீங்கள் மன்னித்தால் தான் என்மனம் சாந்தியடையும்.

ரா: குற்றமதை உணர்ந்ததே எங்கள் மன்னிப்பு.

வீரன்: முகலாயர் வருகிருர்.

வ ம: வரவேற்போம், வாருங்கள்.

காட்சி **33 IV**

இடம் பாண்டிய நாட்டு அரண்மனை. (ராணி, சேழியன், மல்லிகா, சேரன், வட. மன்னன், முகலாயன், கபூர், கிட்டு.)

கபூர்: (மல்லிகாவையும், ராணியையும் பார்த்து) நீங்கள் திருமணம் செய்து கொண்டீர்களே திருமணம் என்ருல் என்ன சொல்லுங்கள்.

சேழி: இதுதானு தெரியாது. இல்லறம் மனித ஜாதியின் மாசற்ற இன்ப புரி-அதன் நுழைவுச் சீட்டு திருமணம்.

**இட்:** சரியான பதில். கபூர்! ஆணும்-பெண்ணும் பூட்டும் சாவியும், போல் ஒத்து போகவேண்டும். இதற்கு நீ என்ன சொல்லுகிருய்?

**கபூ:** உன் மண்டையில் இருக்க வேண்டியது இருக்கிறது என்று சொல்கிறேன், என்ன நண்பா?

**முக:** எனக்கு தெரியாது.

**கபூ:** போயும்-போயும் உன்னைக் கேட்டேனே, என்னை அடிக்கணும்.

**முக:** இப்ப சொன்னுயே அது சரி, இந்தா அடி.

**கபூ:** வேண்டாம்-வேண்டாம், உனக்கொரு கும்பிடு.

**வ ம:** ராணியாரே! நாங்கள் போய் வருகிறோம். இனி நம் நட்பு மேலும்-மேலும் விரிய வேண்டும், அவ்வளவு தான்.

**ராணி:** மனம் ஒரு பள்ளிக்கூடம், எண்ணங்கள் தான் அங்கே மாணவர்கள் மனசாட்சி தான் ஆசிரியர் இதை உணர்ந்து நடந்தால் நட்பு தானே வளரும்.

**கபூ:** அதுசரி குருக்காள்! எனக்கு ஒருவரம் வேண்டும். அதாவது **40, 50** குழந்தைகளைப் பெற்று நாட்டிற்குத் தர வேண்டும் தருவீர்களா?

**சேழி:** தருவோம்.

**தின்:** 40, 50 குழந்தைகளா?

**சேழி:** 40, 50 தா முடியாது-முடியாது.

**கபூ:** இதற்குதான் எதையும் நிதானித்து பேசவேண்டும். நாங்கள் வருகிறோம்.

**ராணி:-**
**மல்:-**
**சேழி:-**
**சேர:-**
**தின்:-**
**இட்:-**



— போய் வாருங்கள்! எல்லோருக்கும்

**வணக்கம்.**